# வப்பு நாய்

**இரு பத்து இரண்டு சிறுகதைகள் நீக்கப்பட்ட ஒரு குறுநாவல் மட்டும் அடங்கிய தொகுப்பு இது.**

**இ.தியாகலிங்கம்**

சுயவெளியீடு
உதவி
**lulu.com**

**VAPPU NAAI**

**(A new short story collections from Norway)**

**First Edition**
**July 2016**
ISBN:978-1-326-72713-0

**Publication Editor**
**R.Thiagalingam**
**Vetlandveien 117**
**0686 Oslo**
**Norway**

**என்னுரை**

என்னுரை எழுதும் இந்தச் சடங்கை என் சோம்பல் வென்றுவிடும் போல் இருக்கிறது. இது தேவைதானா என்கின்ற கேள்வி என் கைவிரல்களைக் குறண்டிப் பிடித்துப் பின்னே இழுக்கின்றன. கதைகள் என்று ஏற்கனவே பிரசங்கிக்கும் நான் என்னுரை என்று மேலும் பிரசங்கிக்க வேண்டுமா என்கின்ற கேள்வி என்னிடம் உண்டு. அதைப் போலவே நான் படைப்பது இலக்கியமா என்கின்ற கேள்வி என்னுள் இருக்கிறது. நான் அதற்கு எனது ஆத்ம திருப்திக்கான கிறுக்கல்களே இவை என்கின்ற பதிலும் வைத்திருக்கிறேன். அதை நம்புகிறேன். புதுமைப்பித்தன் பாரதி போன்றவர்களையும் அதற்கு முந்தியவர்களையும் சில பிந்தியவர்களையும் பெற்ற தமிழ் இலக்கிய உலகிற்கு என்னால் எதுவும் செய்துவிட முடியாது என்பது எனக்குப் புரிகிறது. அத்தால் எனது ஆத்ம திருப்திக்கான கிறுக்கல்கள் நின்றுவிட வேண்டும் என்பதும் அர்த்தமாகாது. அது யாருக்கும் எதற்காகவும் அடங்காது. எந்த வரையறைக்கு உள்ளும் என்னை நுழைத்துக் கொள்வதற்கும் அது இடங்கொடுக்காது. அப்படி இடங்கொடுத்தால் எனது ஆத்ம திருப்தி அன்றோடு செத்துவிடும். எனது கிறுக்கலும் அத்தோடு நின்றுவிடும்.

மேலும் உங்களை நான் மினக்கெடுத்த விரும்பவில்லை. உங்கள் நேரம் பொன்னானது என்பது எனக்குப் புரியும். இந்தத் தொகுப்பைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வதென்றால், இதில் ஓர் ஆரம்ப காலத்துத் தொலைந்து போகாத குறுநாவலும் இரு பத்தி இரண்டு சிறுகதைகளும் அடங்கி இருக்கின்றன. எனது கிறுக்கல்களை உங்களுக்கு நேரம் இருந்தால் வாசியுங்கள். விரும்பினால் அதன் குறைநிறைகளைப்பற்றி உங்கள் விமர்சனங்களை முன்வையுங்கள். சூழல் மாசடைவதை நாங்களும் ஊக்குவிக்காமல் இருப்பதற்கு இயலுமானவரை மின் புத்தகங்களை வாங்குங்கள்.

என் இலக்கியப் பயணத்திற்கு உலகம் எங்கிருந்தும் ஆதரவு தரும் வாசகர்களாகிய உங்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

அன்புடன்
இ.தியாகலிங்கம்

http://www.karainagaran.com
ratnamt67@gmail.com

# பனி தேசத்தில்

## *1. தொடக்கம்*

*மானும் மரையும் சகோதர இனமென்றாலும் அவை சொந்தவினம் ஆகிவிட முடியாது. மரைக் கூட்டம் ஒன்றிற்குள் மான் ஒன்று தனித்து அகப்பட்டுக்கொண்டால், அந்த மானின் மனநிலைதான் எப்படி இருக்கும்? ஏதோ ஒருவித தயக்கம், இனம் புரியாத மெல்லிய அச்சம், எப்படியானவர்கள் என்கின்ற நடுக்கமான சந்தேகம், என்ன நடக்கும் என்கின்ற அச்சமான திகைப்பு... இன்னும் எத்தனையோ உணர்ச்சிகள் அதை ஆட்டிப்படைக்கும். ஏன் அப்படியான உணர்வுகள் ஆட்டிப்படைக்க வேண்டும்? மரைகள் மானைப் பிடித்து உண்ணவா முடியும்? அந்த மானிடம் இவ்வளவு உணர்ச்சிகளும் எதற்காகத் தோன்றுகின்றன? தனக்கும் அந்தக் கூட்டத்தில் உள்ளவற்றிற்கும் ஏதோ வித்தியாசம் உண்டென எண்ணுகிறது. வித்தியாசத்தின் அளவு சிறிதாய் இருந்தாலும் வித்தியாசம் வித்தியாசம் தானே? அந்த மானுக்கு இந்த மரைகளுடன் சேர்ந்து போக முடியுமா என்பது புரியவில்லை. சேரத்தான் வேண்டும் என்பது அந்த மானுக்குக் கட்டாயம் இல்லை என்றாலும் இந்தப் பெண் மானுக்கு அது கட்டாயமாக இருந்தது.*
*அந்தப் பாடசாலை ஊருக்கு ஒதுக்குப்புறமாய் தனிமரம் போல அமைந்திருந்தது. நகரத்தில் இருந்து கிட்டத்தட்ட பதினைந்து கிலோ மீற்றர் தூர இடைவெளி. அந்தப் பாடசாலை அமைந்துள்ள இடத்தைச் சுற்றி இயற்கை கொஞ்சிவிளையாடும் கோலம். அழகிய மலைச்சாரல் ஒன்றில் அமைந்திருந்த அந்தப் பாடசாலையைப் பச்சைப் பட்டில் வெள்ளிச் சருகை போல அருவியொன்று ஊடறுத்தது. அதன் சல சல என்கின்ற சங்கீதம் ஜதி மாறாது தொடர்ந்தது. மேலே மலைக்காடாய் பச்சை விரிப்பின் எல்லையில்லா நீட்சி. அது மனிதனின் அழிப்பை வென்று நிற்பதாகப் பெருமைப்பட்டது. சுவாசிப்பதற்கு மாசை வென்ற சுத்தமான காற்றோடு அமைதியையும் அழகையும் தன்னகத்தே கொண்ட சூழல். அவளுக்கு அந்த இடம் மிகவும் பிடித்துக் கொண்டது. இயற்கையின் அற்புதத்தைப் பார்க்க அதன் மீது அடங்கா மையல் வந்தது.*
*பாடசாலையில் அவளுக்குக் கொடுக்கப்பட்ட அறை பிரதான கட்டிடத்திலேயே இருந்தது. அதன் மேற்றளத்தில் பெண்களுக்கான அறைகளும் இரண்டு சமையல் அறைகளும் ஒரு பெரிய இளைப்பாறும் அறையும் இருந்தன. கீழே சாப்பிடும் அறையும் விளையாட்டு மைதானமும் நீச்சல் குளமும் நூல் நிலையமும் வகுப்பறையொன்றும் இருந்தன. இதைவிடத் தனியே ஒரு கட்டடம் இருந்தது. அதில் ஆண்களுக்கு உரிய அறைகளும் ஒரு இளைப்பாறும் அறையும் சமையலறை ஒன்றும் மூன்று வகுப்பறைகளும் இருந்தன. இதைவிட மலசலகூடங்கள், குளியலறைகள், துணிகழுவும் இயந்திரங்கள் உள்ள அறைகள், களஞ்சியங்கள் என்பதாகப் பல அறைகளின் அடக்கமும் அங்கே. இதை இந்தப் பெண்ணால் தனித்துப் போய்ப் பார்க்க முடியுமா? அவள் முழித்துக்கொண்டு நின்ற போது ஒரு ஐம்பது வயது மதிக்கத்தக்க ஆணோருவர் வந்து,*

*'காய் என் பெயர் குனுத்.' என்று கூறிய வண்ணம் கையைக் கொடுத்தார். இந்தப் பெண்ணும் 'காய் இரதி.' எனக் கையைக் கொடுத்து தன்னை அறிமுகம் செய்து கொண்டாள். பின்பு வந்தவர் 'உங்களுக்கு நான் பாடசாலையைச் சுற்றிக் காட்டுகிறேன்.' என்று கூறிவிட்டு நடக்கத் தொடங்கினார். அவள் அவரைத் தொடர்ந்தாள்.*

*அவர் எல்லா இடங்களையும் சுற்றிக் காட்டினார். பின்பு கட்டிலுக்குப் போடும் உறைகளைக் கொடுத்து விடை கூறிவிட்டார். அவள் தனது அறைக்குச் சென்றாள். அங்கே தன்னைத் தனிமை சிறைபிடித்துக் கொண்டதை உணர்ந்தாள். எவரும் பழக்கம் இல்லை. யாருடன் கதைப்பது என்பதும் புரியவில்லை? எப்படிக் கதைப்பது தயக்கம் வேறு.*

*அவளுக்குத் தேவா அண்ணனின் நினைவு வந்தது. அவர் மிகவும் நல்லவர் என்பது அவள் எண்ணம். எப்படியோ தலையால் நடந்த கணக்காக இருபத்தி இரண்டாயிரம் குரோணர்களைப் பிரட்டி உருட்டிப் பாடசாலைக்குக் கட்டி அவளை இங்கே சேர்த்துவிட்டார். காலையில் அவர் விடை பெறும் போதும் 'நீ படிச்சு நல்ல நிலைக்கு வரவேண்டும்.' என்று கூறினார். அவருக்கு நாளைக்குப் பாடசாலை உள்ளது. அதனால் அவளுடன் தங்கி இங்கே உள்ள நடைமுறைகளைச் சொல்லித்தர முடியாமல் போய்விட்டது. நேரம் இருந்திருந்தால் அவர் எல்லா விடயங்களையும் விபரமாய்க் காட்டிக் கொடுத்திருப்பார்.*

*மனம் எங்கெங்கோ அலைய கைகள் ஒருவாறு சிரமப்பட்டுப் படுக்கைக்கு உறையை மாற்றின. 'இவர்கள் ஆங்கிலம் கதைக்கும் போது மிகவும் வேகமாகக் கதைக்கின்றனர். ஏன் என்று புரியவில்லை. வெளியே போகலாம் என்றால் யாரோடு போவது? எங்கே போவது? என்பதும் புரியவில்லை. இப்படியே தொடர்ந்து உள்ளேயே இருக்கவும் முடியாது. அப்படி இருந்தால் பைத்தியம் பிடித்துவிடும்.' என்று இரதி எண்ணிக் குழம்பினாள்.*

*அவளுக்குப் பசி வயிற்றை வெறிகொண்ட பேயாகக் காந்தியது. அண்ணா கொடுத்த ஆப்பிள் ஒன்றை எடுத்து அவள் நன்னத் தொடங்கினாள். 'எத்தனை மணிக்கு இரவுச் சாப்பாடு? நேரம் போனதே தெரியவில்லை. ம்... வெளியே இருட்டி விட்டது.' என்று எண்ணிய வண்ணம் அவள் கையில் இருந்த கடிகாரத்தில் மணியைப் பார்த்தாள். அது ஏழைக் காட்டியது. ஏழுமணிக்கு அல்லவா இரவுச்சாப்பாடு?' என்பது நினைவுக்கு வந்தவுடன் அரைவாசி ஆப்பிளை என்ன செய்வது என்பது அவளுக்குப் புரியவில்லை. 'குப்பைக்குள் எறிந்துவிட்டுப் போகவா? அல்லது பின்பு வந்து மீண்டும் சாப்பிடவா?' என்று எண்ணியவளுக்கு அண்ணனின் பாசம் ஆப்பிளாகப் பைக்குள் இருப்பது ஞாபகத்திற்கு வந்தது. கையில் வைத்திருந்ததைக் குப்பை வாளிக்குள் எறிந்துவிட்டு கதவைப் பூட்டிக்கொண்டு நடக்கத் தொடங்கினாள். சாப்பாட்டு அறைக்குப் போகும் பாதை அவளுக்கு நினைவில் இருக்கவில்லை. சிறிது தூரம் செல்ல ஒரு அறையின் கதவு திடீரெனத் திறபட்டது. அதற்குள் இருந்து ஓர் சிறிய நோர்வே நாட்டுப் பெண் வெளியே வந்தாள். இவர்களிலும் சிறிய ஆட்களும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்று எண்ணிய வண்ணம் இரதி அவளைப் பார்த்துச் சிரித்தாள். அவள் மிகவும் நல்லவளாய் இருக்க வேண்டும். கண்டவுடனேயே காய் (வணக்கம்) என்றாள். பதிலுக்கு இவளும் வணக்கம் சொன்னாள். அதைத் தொடர்ந்து அவள் ஆர்வமாகக் கதைக்கத் தொடங்கிவிட்டாள்.*

*'நீங்க எந்த நாட்டுக்காரர்?' அவள் ஆங்கிலத்திலேயே இரதியிடம் கேட்டாள்.*
*'நான் இலங்கையில் இருந்து வந்திருக்கிறேன்? நீங்க எந்த இடத்தில் இருந்து வந்திருக்கிறீர்கள்?' என்றாள் இரதி.*
*'துறொம்சோ. என்னுடைய பெயர் சீவ்.'*
*'ஓ நான் இரதி. எனக்கு எப்பிடிச் சாப்பாட்டு அறைக்குப் போவது என்று தெரியாது.'*
*'என்னோடு வாருங்கள். நான் காட்டுகிறேன். அது சரி நீங்க மாத்திரம்தான் வந்தீர்களா அல்லது உங்களைவிடப் பலர் வந்திருக்கிறீர்களா?' என்றாள் சீவ்.*

'எனக்குச் சரியாகத் தெரியாது. நாளைக்குச் சிலவேளை யாராவது வந்தாலும் வரலாம் என்று நினைக்கிறேன்.' என்றாள் இரதி.
கதைத்துக்கொண்டே இருவரும் சாப்பாட்டறையை வந்தடைந்தனர். சாப்பாட்டு அறையில் பாண் துண்டுகள் வெட்டி வைக்கப்பட்டிருந்தன. அவற்றிற்குப் பலவகையான மேலே பூசி அல்லது வைத்துச் சாப்பிடும் துணையுணவுகள் இருந்தன. இரதிக்கு இன்னும் எப்படி இவற்றை எடுத்துச் சாப்பிடுவது என்று தெரியாது. அவள் முதன் முறையாக ஐரோப்பியருடன் இன்று சாப்பிடப் போகின்றாள். சீவ்வை முன்னுக்கு உணவை எடுக்கவிட்டு அவளைப் பார்த்து தானும் அதை எடுத்தாள். 'நீங்கள் பால் குடிப்பீர்களா அல்லது கோப்பி குடிப்பீர்களா?' என்று சீவ் கேட்டாள்.
'பால்.' என்றாள் இரதி.
ஒரு பால் பெட்டியுடன் இரதிக்கும் சேர்த்துக் கண்ணாடிக் குவளைகளையும் எடுத்துக்கொண்டு வந்து எதிர் இருக்கையில் அமர்ந்தாள் சீவ்.
'இரதி... நல்ல சிறிய பெயர்.' என்றாள் சீவ்.
'தாங்ஸ்.' என்றாள் இரதி.

இரதிக்கு எப்படி பாணிற்கு வெண்ணெய்யைப் பூசுவது, எந்தத் துணையுணவை அதன் மேல் வைப்பது என்பதில் பெரும் போராட்டம் உண்டாகியது. அவள் அதைச் சமாளித்துக்கொண்டு சீவைப் பார்த்து அவள் செய்வது போலத் தானும் அப்படியே செய்தாள். இருந்தாலும் சிலவேளை கைகள் அவளுக்குப் பரபரக்கத்தான் செய்தன. சீவ் அதைக் கண்டு கொள்ளாதவள் போன்று காட்டிக் கொண்டது இரதிக்கு மண்ணிற்குள் தலையைப் புதைத்த தவளையான நிம்மதியைத் தந்தது.
சிறிது நேரத்தில் மற்றும் பல ஆண்களும் பெண்களும் வந்து இரதியோடு அறிமுகம் செய்தார்கள். ஒரு சிலர் இரதியின் பெயரையும் கேட்டுத் தங்கள் பெயரையும் கூறிச் சென்றனர். ஆண்களின் பார்வையில் ஒரு ஆர்வம் இருப்பதாக இரதிக்குத் தோன்றியது. இது இயற்கைதானே? என்பதால் அவள் பெரிதும் அதைப்பற்றி அலட்டிக் கொள்ளவில்லை.

'இன்று பெரிய வகுப்பறையில் திரையில் படம் காட்டுவார்கள். படம் எட்டுமணிக்குத் தொடங்கும். வருகிறாயா?' என்று சீவ் கேட்டாள்.
'நிச்சயமாக.' என்றாள் இரதி ஆவலோடு.
வகுப்பறைக்குள் போகும் போது எல்லோரது கண்களும் ஒரு முறை தன்னை மேய்வதாக இரதி உணர்ந்தாள். அந்தப் பார்வை ஒரு அதிசய மிருகத்தைப் பார்ப்பதான வியப்போடு பார்ப்பதாய் அவளுக்குத் தோன்றியது. ஏன் இவர்கள் இப்படிப் பார்க்கிறார்கள் என்ற கேள்விக்குத் தன்னுடைய கறுப்பு நிறமே காரணம் என்பதும் அவளுக்குப் புரிந்தது. இருவரும் ஒரு இடத்தில் அமர்ந்து கொண்டனர். தன்னை இப்பொழுதும் அப்படித் தொடர்ந்து பார்க்கிறார்களா என்று கடைக் கண்ணால் இரதி பார்த்தாள். அவர்கள் ஆவலோடு முன்னுக்குப் போடப்பட்ட திரையைப் பார்த்தார்கள். வகுப்பறையில் இருக்கும் போதே பலர் சோடி சோடியாய் இருந்தனர். சிலர் கைகளால் தங்களைத் தயக்கமின்றி இணைத்துக்கொண்டு இருந்ததை இரதி பார்த்தாள். சிலர் அதற்கும்மேற் சென்று உதடுகளாற்கூட அவ்வப்போது முத்தமிட்டுச் சங்கமித்தனர். இரதி தனது பார்வையைத் திரையில் பதியவிட்டாள்.

திரையில் வுர்நு டுழுஏநு என்கின்ற படம் தொடங்கியது. அதில் அப்பட்டமான ஆபாசக் காட்சிகள் நிறைந்திருந்தன. அது ஒரு இஸ்ரேல் நாட்டுப் படம். இரதி அதைப் பார்க்க முடியாது நெளிந்தாள். அவளுடன் இருந்த மற்றைய அனைவருமே படத்தில் ஒன்றிப்போய் இருந்தனர். படத்தைப் பார்க்காமல் போவோமா என்று இரதி எண்ணினாள். தனிமை அவளைப் பயமுறுத்தியது. ஏன் நான் இதைப்

பார்க்கக்கூடாது? என் மனவடக்கம் என்னிடம் அல்லவா என்று தன்னையே கேட்டுக் கொண்டாள். இலங்கையில் பார்ப்பது என்றால் சமுதாயத்திற்குப் பயப்பட வேண்டும். இங்கே யாருக்குப் பயப்பட வேண்டும்? ஏன் பயப்பட வேண்டும்? எனத் தன்னைத்தானே தொடர்ந்தும் கேட்டுக் கொண்ட இரதி அதன் பின்பு படத்தில் ஒன்றினாள்.

## 2. புதிய நண்பர்கள்

மறுநாள் மதியச் சாப்பாடு முடிந்த பின்பு இளைப்பாறும் அறையில் எலிசபெத், நீனா, கன்ன, அனிதா என்பவர்களோடு இன்னும் பல பெண்கள் புடைசூழ இரதி இருந்தாள். அவளிடம் இலங்கையைப் பற்றியும், அங்கே நடக்கும் பல பிரச்சனை பற்றியும் அவர்கள் ஆர்வமாகக் கேட்டுக் கொண்டு இருந்தனர். அவளும் அதற்குத் தன்னால் முடிந்த அளவில் ஆங்கிலத்தில் விளக்கம் அழித்தாள்.

அப்போது வெளியே ஒரு வாகனம் வந்து நின்றது. எல்லோரும் கதைப்பதை நிறுத்திவிட்டு அதைப் பார்த்தனர். இரதியும் ஆர்வத்தோடு அதைப் பார்த்தாள். அதில் இருந்து மூன்று கறுப்பு ஆசியர்கள் இறங்கினார்கள். இரதிக்கு அவர்களின் உடையின் நாகரிகத்தில்; இவர்கள் நிச்சயமாக இலங்கையராகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. அதுவும் அவர்கள் தமிழராய் இருந்து விட்டால் என்கின்ற ஆசை மனதில் பொங்கியது. 'எண்ணும் போதே எவ்வளவு இன்பமாய் உள்ளது. உண்மையாய் அவர்கள் தமிழராய் இருந்துவிட்டால்?' என்கின்ற கேள்வி அவளிடம் பிறந்தது. அவளுக்கு அந்த உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கின்ற ஆவல் மேலிட்டது. தன்னைச் சுற்றி இருந்தவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவ்விடத்தைவிட்டு மெதுவாய் நகர்ந்தாள்.

இவள் அப்படி வெளியே செல்லவும் குனுத் இவளைத் தேடிக்கொண்டு வரவும் சரியாக இருந்தது. 'இரதி உங்கள் நாட்டு நண்பர் ஒருவர் உமக்குத் துணையா வந்திருக்கிறார். அதுவும் உனது அறைக்குப் பக்கத்து அறையில் அவர் தங்கப் போகிறார். நீங்கள் அவரைப் போய்ப் பாருங்கள்.' என்று கூறிவிட்டு அவர் ஏதோ அலுவலாகச் சென்றார். இரதி ஓட்டமும் நடையுமாகத் தனது அறைக்குச் சென்றாள். தன்னைச் சிறிது ஒப்பனை செய்துவிட்டுப் பக்கத்து அறையின் கதவைத் தட்ட 'உள்ளுக்கு வாங்கோ.' என்று முதலில் தமிழிலேயே குரல் வந்தது. பின்பு அது ஆங்கிலமாய் மாறியது. இரதி சிரித்துக் கொண்டே உள்ளே சென்றாள்.
'கலோ!' என்றவண்ணம் கதவைத் திறந்தான் அவன். பொது நிறமென்றாலும் வட்டமுகம். அரும்பு மீசையின் மெல்லி கறுப்புக்கரை அவன் மூக்கின் கீழே. அரிசி வரிப் பற்கள். முறைப்பில்லாத கருமையான தலைமுடி. கறுத்த ஜீன்சும் பச்சைச் சுவேற்றரும் அணிந்திருந்தான். அவனைப் பார்த்து,
'நீங்க எந்த இடம்?' என்றாள் இரதி.
'யாழ்ப்பாணம்.' என்றான் அவன்.
'யாழ்ப்பாணத்தில?' என்று இரதி நோண்டினாள்.
'சுண்டுக்குளி, நீங்க?' என்றான் அவன்.
'மூளாய். உங்களோட வேற யாராவது வந்தவையோ?'
'பாத்திட்டுத்தானே கேட்கிறீங்கள்? ம்... என்னோட இரண்டு சங்கானைப் பெடியள் வந்தாங்கள். ஆனா அவைக்கு மற்றக் கட்டிடத்திலதான் றூம் கொடுத்திருக்கினம். சாப்பாடு எல்லாம் எப்படி இருக்குது? கனக்க வித்தியாசமா இருக்குதோ?' என்றான் அவன்.
'நிறைய வித்தியாசமாய்த்தான் இருக்குது. காலேலும் இரவிலும் பாண்தான். மத்தியானம் உருளைக்கிழங்கோட ஏதாவது ஒண்டு வைப்பினம். எங்கட உறைப்பு,

*மணம் குணம் கிடையாது. கஸ்ரப்பட்டுச் சமாளிக்க வேண்டி இருக்குது.' என்றாள் அவள்.*
*'அது சரி உங்கட பெயர் என்ன?' என்றான் அப்போது தான் ஞாபகம் வந்தவனாய்.*
*'இரதி. உங்கட பெயர்?'*
*'தவராசா.'*

## *3. சுகன்யா*

*சுகன்யா தனது உடுப்புக்களையும் சில புத்தகங்களையும் தனக்குக் கொடுக்கப்பட்ட பகுதியில் அடுக்கினாள். அதற்கு இரதியும் உதவி செய்தாள்.*
*அவளது சுருட்டை முடி அடிக்கடி கண் முன்னே விழுவதும் அதைப் பின்னே தள்ள அவள் நிமிர்வதும் தனியழகு. அதைவிட அவளின் சிரிப்பு இதயத்தைக் கொய்வதாக இருப்பதாய் இரதிக்குத் தோன்றியது. கன்னத்தில் குழி விழும் வித்தை அவள்மேல் பெண்ணென்றும் பாராது காதலை உண்டு பண்ணிவிடுமோ என்கின்ற எண்ணம் இரதியிடம். கண்களில் எப்போதும் மின்னல் போன்ற ஒளிக்கீற்றின் தெறிப்பு. மாம்பழ நிறமாய் மின்னும் அவள் வளவளப்பான தோல். அதற்கு மேல் அவளை இரசிப்பதை இரதி தொடர விரும்பவில்லை.*
*'இவங்கள் எப்பிடி?' என்று சுகன்யா இரதியிடம் கேட்டாள்.*
*'தெரியேல்ல. ஆனா நல்லவங்களா இருப்பினம் போல இருக்குது. ஒரு சில கூடாத ஆட்களும் இருக்கலாம். ஆனாப் பொதுவா நல்லவையாத்தான் இருப்பினம். நல்லாக் கதைக்கினம். அது சரி உம்மோட வந்த பெடியள் எப்பிடி?' என்றாள் இரதி.*
*'அவையா? நல்லவைதான். அ;யும் நல்லாக் கதைப்பினம். நல்லாப் பளகுவினம். நான் ஒஸ்லோவில இருந்து அவையோடதான் வந்தனான்.' என்றாள் சுகன்யா.*
*இப்படி இவர்கள் கதைத்துக் கொண்டு இருக்கும் போது கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. இரதியே 'ஊழஅந ஐn' எனக் குரல் கொடுத்தாள். அதன் பின்பு கதவைத் திறந்து கொண்டு அந்த இரு வாலிபர்களும் உள்ளே வந்தனர்.*
*அவர்கள் இருவருமே அழகிலோ, கம்பீரத்திலோ, கவர்ச்சியிலோ குறைந்தவர்கள் என்று கூறமுடியாது. அதேவேளை ஆணழகன் போட்டிக்குப் போகின்ற அழகர்கள் என்று புளுகவும் முடியாது. சாதாரணமாகப் பெண்களைக் கவரக்கூடிய ஒரு அழகு அவர்களிடம் இருந்தது. இரதிக்கு இவர்கள் புதியவர்கள். அதனால் நாணம் அவளை மௌனியாக்கியது. அந்த மௌனத்தை சுகன்யாவே உடைத்தாள்.*
*'இரதி இவர் பெயர்தான் சுரேன்.' என்று அதில் சிவந்த உயரமான வாலிபனைச் சுட்டிக் காட்டினாள். அவனைப் பார்க்கும் போதே இரதிக்கு நொஞ்சாங்கூட்டிற்குள் ஏதோ பறப்பது போன்ற போதை உணர்ச்சியாய் இருந்தது. ஏன் என்பது அவளுக்குப் புரியவில்லை. புரியாவிட்டாலும் அனுபவிப்பது ஆனந்தமாய் இருந்தது.*
*'என்ர பெயர் இரதி.' என்றாள் இரதி பதிலுக்கு. சுகன்யா மற்ற வாலிபரைச் சுட்டிக் காட்டி 'இவர் பெயர் விக்கி.' என்றாள். இருவரையும் நிறுத்தி வைத்துக் கதைப்பது அதன் பின்புதான் சுகன்யாவுக்கு விளங்கியது. அதையடுத்து அவர்களைத் தனது சோபாவில் அமருமாறு கேட்டுக் கொண்டாள். இந்தச் சோபா பகலில் சோபாவாகவும் இரவில் படுக்கையாகவும் பாவிக்கக்கூடியது.*
*இரதிக்கு மனதில் இனம் புரியாத சந்தோசம் பொங்கல் பானையின் நுரை போலப் பொங்கியது. அதற்குக் காரணம் யார் என்பதும் புரிந்தது. அந்த அறைக்குள் வந்தது தொடக்கம் அவன் விழிகள் இரதியைப் பருகிக் கொண்டே இருந்தன. அதை இரதியும் மென்மையாக உணர்ந்தாள். அவளுக்கு ஏனோ அவனைப் பார்ப்பதில் இன்பமாயும் விலக முடியாத வில்லங்கமாயும் இருந்தது.*
*விக்கியோ சுகன்யாவோ காமம் வென்று ஞானம் பெற்ற முனிவர்கள் அல்ல. ஆனால் கண்டவுடன் அவர்களுக்குக் காதல் வரவில்லை. அப்படி எல்லாம் வரும் என்பதில் சுகன்யாவுக்கு நம்பிக்கை இருக்கவில்லை. சாதாரண நண்பர்கள் பழகுவது*

போன்றே அவர்கள் பழகினர். பார்வையால் நடந்த சம்பாசனைகளை மீண்டும் சுரேன் உடைத்தான்.

'இண்டைக்கு ஏதாவது படிப்பிச்சினமோ?' என்று அவன் கேட்டான். இதற்கு இரதியே பதிலளித்தாள்;.
'இல்ல இண்டைக்கு ஒண்டும் நடக்கேல்ல. நாளைக்குத்தான் படிப்புக்கள் தொடங்கும் எண்டு நோஸ்குகள் கதைச்சினம்.' என்றாள்.
சுரேன் மௌனம் காத்தான். பின்பு அதன் அர்த்தம் புரிந்தவனாய்,
'நோஸ்குகள் எண்டு நீங்கள் பெயர் வைச்சிட்டியள் போல?' என்றான்.
'அப்பிடி இல்ல. இஞ்ச தமிழாக்கள் நோர்வேக்காரரை அப்படித்தான் சொல்லுவினமாம். என்னிட்ட அண்ணா அப்பிடித்தான் சொன்னவர்.' என்றாள் இரதி.
'உங்கள் இரண்டு பேருக்கும்தானே இந்த அறை?' என்று விக்கி கேட்டான்.
'ஏன் உங்களுக்கு தனித்தனி அறை தந்திருக்கினமே?' என்று மடக்கினாள் சுகன்யா.
விக்கி தனது மடத்தனமான கேள்வியை எண்ணி அசடு வழிந்தான். புது அறிமுகமாயிருந்தும் இரதி சுரேனையும், சுரேன் இரதியையும் விழிகளால் ஆசைதீரப் பருகுவதில் மாத்திரம் சளைக்கவில்லை.
பின்பு நீண்ட நேரமாக இலங்கையையும் அதன் அரசியல் நடப்பையும் பற்றிக் கதைப்பதில் காலத்தைக் கழித்தனர். வந்தது தொடக்கம் சாப்பாட்டுக்குப் போகும் வரையும் இரதி சுரேனுடனும், சுரேன் இரதியுடனும் கதைப்பதிலேயே மிகவும் ஆர்வம் காட்டினர். இதைப் புரிந்து கொண்ட சுகன்யாவும் விக்கியும் தங்களுக்குள் கதைத்துக் கொண்டாலும் இருவரையும் கவனிக்கத் தவறவில்லை.
அன்று மாலைச் சாப்பாட்டிற்கு இரதியே தலைமை வகித்தாள். அவளைப் பார்த்துப் பார்த்தே மற்றவர்களும் எப்படிச் சாப்பிட வேண்டுமெனக் கற்றுக் கொண்டனர். ஊரில் இருந்து எத்தனையோ ஆயிரம் மயில்களுக்கு அப்பால் இப்படி ஒரு சந்தர்ப்பம் வந்து விட்டால் எந்தக் கோழைக்கும் சோடி சேரும் எண்ணம் வந்துவிடும். இரதியிடம் சுரேன் ஈடுபாடு கொண்டதைப் போல் விக்கியும் மெல்ல மெல்லச் சுகன்யாவிடம் நெருங்கினான். சுகன்யா அதை அவ்வளவாக விரும்பாவிட்டாலும் தட்டிக்கழிக்க மனமில்லாது தயங்கினாள்.
அந்தப் பாரிய இளைப்பாறும் அறையில் நான்குபேரும் வேலையற்ற நேரத்தைப் போக்க கடுதாசி விளையாடிக் கொண்டு இருந்தனர். ஒரு மூலையில் எலிசபெத் யாருடனோ முத்தமிட்டுத் தனது பேரன்பை வெளிப்படுத்திக் கொண்டு இருந்தாள். அவர்கள் கன்னத்தில் முத்தமிடும் காகக் குளியல் பயிலாது அதற்கும் மேலாகக் காமம் பயின்றனர். அந்தப் பயில்வில் அவன் உணர்ச்சியின் உச்சக்கட்டத்திற்குப் போகவே எலிசபெத்தை அப்படியே சரித்து அவள் மேல் படர்ந்த வண்ணம் சுவைத்தான். இக்காட்சியை சுரேனும் விக்கியும் கவனித்தனர். அவர்கள் அதன் ருசியில் கடுதாசி விளையாடுவதைக்கூட நிறுத்திவிட்டுக் கவனிக்கத் தொடங்கினார். இவர்களுக்கு இது புதுமையிலும் புதுமை. இலங்கையில் கனவில்கூட இப்படி யாரும் பொது இடத்தில் செய்யமாட்டார்கள். இவர்கள் கடுதாசி விளையாடுவதையும் நிறுத்திவிட்டு தங்களுக்குப் பின்னால் என்ன பார்க்கிறார்கள் என்பது பெண்கள் இருவருக்கும் புரியவில்லை. அவர்கள் அதையறியத் திரும்பிப் பார்த்தனர். அவர்களால் அதைத் தொடர்ந்தும் பார்க்க முடியவில்லை. அவர்களின் தலையை கொண்டு வந்த நாணம் அழுத்திக் குனிய வைத்துவிட்டது. நாணம் நமக்கில்லை என்பதாக சுரேனும் விக்கியும் தங்களின் பார்வையைத் தொடர்ந்தும் எடுக்கவில்லை. இதைப் பார்த்த அவ்விரு மங்கையருக்கும் வெட்கமாகவும், சிரிப்பாயும், சங்கடமாயும் இருந்தது. எலிசபெத்தின் இதழை ஆளச் சுவைத்தான் யான். அவன் தன்னைக் காமத்தில் இழந்தானா? அல்லது குசும்பிற்கு செய்தானா என்பது புரியவில்லை. அவனது கைகள் எலிசபெத்தின் மென்மையான மார்பில் நர்த்தனமாடின. அவள் 'நய்.' என்ற

அலறலுடன் துடித்துப் பதைத்து எழுந்தாள். அத்தால் காம காண்டம் இடையில் திடீரென நின்று போயிற்று.

சுரேனுக்கும் விக்கிக்கும் தங்களின் அசிங்கமான இரசிப்பின் உண்மை அதன் பின்னாக உறைத்தது. இரதியும் சுகன்யாவும் ஏன் தங்களைப் பார்த்துச் சிரிக்கிறார்கள் என்பதும் புரிந்தது. அவர்கள் பரிதாபமாக அசடு வழிந்தனர். அதன் பின்பு சுரேன் இரதியைப் பார்த்ததில் இரதிக்கு என்னவோ போன்று இருந்தது. தலைக்குள்ளும், உடம்பிற்குள்ளும் குளிராய் ஏதோ ஓடித் திரிவதான அவஸ்தை அவளுக்கு. ஏன் என்பது அவளுக்குப் புரியவில்லை. சுரேனைப் பார்க்கும் போது வெட்கம் அதிகமாகி இருந்தது. அதேவேளை அவனைப் பார்க்க வேண்டும், பாரத்துக் கொண்டே இருக்க வேண்டும் என்கின்ற வெறி துளிர்விட்டது. சுரேன் மன்மதனின் கணைக்குள் கட்டுண்டான். அதில் இருந்து அவனால் தப்பித்துக் கொள்ளவே முடியவில்லை. எப்போது இரதி இந்தக் கட்டில் இருந்து தன்னை மீட்பாள் என்பது அவனுக்குப் புரியவில்லை. எதிர்பார்ப்பு அவனை வாட்டத் தொடங்கியது. இந்த மன்மதப் பிணையல் இங்கே சர்வ சாதாரணம். அது எங்கு, எப்போது, எப்படி, எவரிடம் உருவாகும் என்பதிற்கு வரைபிலக்கணம் கிடையாது. அதை ஒரு பொருட்டாகவும் மற்றைய மனிதர்கள் எடுத்துக் கொள்ளார். எங்கள் கலாசாரத்தில் இது கண்டதைக் காணாத சமாச்சாரம்தான். அது காட்சியானால் இரசிப்பதற்கும் பலர் உண்டுதான்.

சுரேன் அலுப்போடு சாளரத்தின் வழியே மரங்களைப் பார்த்தான். ஊசியிலை மரங்கள் நெருக்கமாக அணிவகுத்து நின்றன. 'இலங்கையில் உள்ள மரங்களைப் போன்று ஏன் இவற்றிற்குப் பரந்த இலைகள் இல்லை? நிச்சயம் அப்படி இங்கே இருக்க முடியாது. அவ்வளவு குளிர் இங்கு. அதைத் தாங்குவதற்கு ஏற்ப அப்படி ஒரு இசைவாக்கத்தை இயற்கை விரித்துக் கொண்டிருக்கிறது. நமது நாட்டு நாகதாளிகள் வெப்பத்தைத் தாங்குவதற்கு எடுத்துக்கொண்ட அவதாரம் போல... பனிகள் அதிகம் இலைகளில் படியவே முடியாத ஒரு அமைப்போடு குளிரைத் தாங்கும் யுக்தி. இயற்கை இவற்றிற்கு குளிரிடம் இருந்து தப்பித்துக் கொள்வதற்கு கொடுத்த வரம். காலநிலையும் அதைச் சுற்றியுள்ள சூழலும்தான் இங்கே எப்படி மரம் வளரவேண்டும் இலங்கையில் எப்படி மரம் வளரவேண்டும் என்பதை நிர்ணயிக்கின்றன. இங்கே பூவரசமரத்தை கொண்டுவந்து நாட்டினால் என்ன செய்யும்? பூவரசம் மரத்தால் குறுகிய காலத்திற்குள் ஊசி இலை போல இலைகளை உருமாற்றிக் குளிரைத் தாங்கிக் கொள்ளும் சக்தியைப் பெற்றுவிட முடியாது. அது நீண்டகாலத்தில் நடைபெறும் ஒரு செயற்பாடு. இசைவாக்கம் இல்லாத உயிரினங்கள் அழிந்து போவதே இயற்கை. வாழ வேண்டும் என்றால் இசைவாக்கத்தை வரித்துக் கொள்வது கட்டாயமாகிறது. சாதாரண விலங்குகளாலோ தாவரங்களாலோ அது குறுகிய காலத்தில் முடியாத காரியமாகிறது. மனிதனால் மாத்திரம் இசைவாக்கத்தின் காலத்தை தனது மூளையால் சுருக்கிக் கொள்ள முடிகிறது. தன்னை எந்தவொரு சூழலிலும் எப்படிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பது மனிதனுக்குப் புரியும். மனிதன் இந்த அறிவை இயற்கையிடம் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு மட்டும் பயன்படுத்தவில்லை. மற்றைய மனித சமுதாயங்களைப் போல வாழ, அவர்களின் சமுதாயத்துக்குள் பொருந்தவும் பாவிக்கிறான்.' என்பதாகச் சுரேன் எண்ணினான். சுரேன் அப்படிப் பழகிக் கொள்வதில் ஆர்வம் கொண்டுவிட்டான். இளமையை இருக்கும் போதே அனுபவிக்க வேண்டும் என்கின்ற ஐரோப்பியரின் தத்துவம் இவனையும் தொற்றிக் கொண்டது. அவனது உள்ளத்து உணர்ச்சிகளை இரதி எப்போதும் தூண்டிக் கொண்டே இருந்தாள். அவளின் அன்பின் அதிகரிப்பு சிறிது சிறிதாய் சுரேனுக்குச் சித்தித்தது. நோஸ்குகள் சல்லாபம் பண்ணும் போது அவள் பார்க்கும் பார்வையில் ஓர் ஆர்வம் தோன்றும். அது எப்படிப் பட்டது என்பதை

*சுரேனால் நிச்சயிக்க முடியவில்லை. இரதியுடன் தனியே கதைத்தால் விளங்கிக் கொள்ளலாம் என்பது அவன் எண்ணம். விக்கியும் சுகன்யாவும் இருக்கும் போது உண்மையான உள்ளக் கிடக்கையை அவள் வெளியிடமாட்டாளென எண்ணிக் கொண்டான். அவனது சிந்தனை தொடரமுடியாது மணி அடித்தது.*

★

*ஒரு மாதம் என்னும் அளவு காலம் தொடர் இயக்கத்தில் காட்டாறாய் உருண்டோடி விட்டது. ஒரே இடத்தில் நாள் முழுவதும் இருந்து தனகியதில் சாதாரண பழக்கத்தைவிட நெருக்கம் அதிகம் ஏற்பட்டிருந்தது. சுரேனும் இரதியும் அதில் மிகவும் முன்னேறி இருந்தனர். அன்று வெள்ளிக் கிழமை. இரவுச் சாப்பாட்டின் பின்பு பெரிய இளைப்பாறும் அறையில் நிகழ்ச்சிகள் நடக்கத் தொடங்கின. நான்குபேருமே ஒரே வரிசையில் உட்கார்ந்து இருந்தனர். சுகன்யாவும் விக்கியும் இரு கரைக்கும் இருந்தனர். இரதியும் சுரேனும் இங்கும் விட்டுவைக்க மனம் இல்லாது ஒட்டியிருந்தனர். பஞ்சையும் நெருப்பையும் பக்கத்தில் வைத்தாயிற்று. பற்ற வைப்பதற்கு கரும்புக் கணையோடு உருபிலாதவன் துருவத்துக் குளிரிலும் தூக்கமின்றி அலைந்தான். முதலில் பாட்டுப் பாடினார்கள். ஆசிரியர்கள் எல்லோரும் சேர்ந்து பிதாசுதனின் பெருமை பற்றிப் பாடினர். முடிந்ததும் பலத்த கைதட்டுக் கிடைத்தது. இவர்களுக்குப் பாட்டு விளங்கவில்லை. இசை இளையராசாவைப் போல் இல்லாவிட்டாலும் இரசிக்கக்கூடியதாகவே இருந்தது. பின்பு கூத்து போன்ற ஒரு நிகழ்ச்சி நடந்தது. இரண்டு பெண்கள் அதில் நடித்தனர். ஒரு பெண் தாய் வேடம் போட்டிருந்தாள். அவளுக்குப் பெயர் தூன. மகள் வேடம் கட்டியவள் கில்ட. தூன அழகான பொன் கேசமும், நீலக் கண்ணும், மெல்லிய இதழும், முத்து போன்ற பல் வரிசையும் உடையவள். அவளைப் பார்க்க வேண்டும் என்கின்ற ஆசை எழுவதற்கு உருபிலாதவன் உதவியெல்லாம் தேவைப்படாது. விக்கி அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தான். ஒருத்தனுக்கு ஒருத்திதான் என்பது பற்றி அவன் நினைப்பதில்லை. மொழி பிசகாய் இருந்ததால் நிகழ்ச்சி முழுமையாக அவர்களுக்கு விளங்கவில்லை. அந்த விளக்கமின்மை அவர்களுக்குச் சலிப்பை ஏற்படுத்தியது. இரதி எழுந்து தனது அறைக்குச் சென்றாள். செல்லும் போது சுரேனை ஒருமுறை பார்த்துவிட்டுச் சென்றாள். சுரேனுக்கு இவள் என்ன எண்ணுகின்றாள் என்பதே புரியவில்லை. அவனுக்கு மனது இருப்புக் கொள்ளவில்லை. இரதியுடன் தனிமையில் இருக்கும் கற்பனை அவனை ஆட்கொண்டது. அவன் அதே வீச்சில் எழுந்தான். இயந்திர மனிதன் போல் அவள் அறையை நோக்கிச் சென்றான்.*

*இதைப் பார்த்த சுகன்யா தனக்குள் சிரித்துக் கொண்டு நிகழ்ச்சியைப் பார்த்தாள். விக்கி சுகன்யாவின் அழகையும் நோர்வே பெண்களின் அழகையும் ஒப்பீடு செய்தான். அதே வேளை இடையிடையே சுகன்யா விக்கியை கவனிக்கத் தவறவில்லை.*

*இயந்திர கதியில் கதவின் அருகே சென்ற பின்பும் சுரேனுக்குத் தயக்கமாக இருந்தது. 'ஏதாவது தப்பாய் நடந்துவிட்டால்? சீ... இது என்ன மடத்தனம்? எது செய்தாலும் நான்தானே செய்ய வேண்டும்? என்னை மீறி எப்படித் தப்பு நடக்கும்? அவ்வளவிற்கு என்னை நான் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாதவனா?' என்று எண்ணியவன் துணிவுடனே கதவைத் தட்டினான். 'வென்த லித்.' என்று கூறிய பின்பு சில வினாடிகள் சென்றன. திரும்பலாமா என்று சுரேன் எண்ணவும் கதவு திறந்து கொண்டது.*

*'சுரேனா?' என்று ஆச்சரியமும் அனந்தமும் காட்டினாள் இரதி.*

'ம்...' தலையை ஆட்டினான் சுரேன்.
'நான் யாராவது வாத்திமாரா இருக்குமெண்டு நினைச்சன்.' இரதி உடுப்பு மாற்றி இருந்ததைச் சுரேன் கவனித்தான். பின்பு சுரேனைப் பார்த்து,
'இரு சுரேன்.' என்றாள் இரதி கெஞ்சும் தொனியில்.
'சொல்லாட்டி மாத்திரம் இருக்க மாட்டனாக்கும்?' என்று கூறிவிட்டுச் சுரேன் இருந்தான்.
'நீங்க இருப்பீங்க... இருப்பீங்க...' என்று தலையை பக்க வாட்டிற்கு ஆட்டி ஆட்டிக் கூறிவிட்டு ஒரு நமட்டுச் சிரிப்புடன் சுரேனைப் பார்த்தாள் இரதி. பின்பு
'நான் அப்பிடிச் சொல்லோணும் எண்டில்லைத்தான். ஆனாப் பண்பாடு எண்டு ஒண்டு இருக்கெல்லே?' என்றாள் அவள் தொடர்ந்தும்.
'எனக்கு ஒண்டும் தரமாட்டியோ? வந்த விருந்தாளியைக் கவனிக்கிறது இப்பிடியே?' என்றான் சுரேன். அவன் அங்கிருந்த கண்ணாடிக் குவளைக்குள் மேசையில் இருந்த கோலாவை உரிமையோடு ஊற்றிக் கொண்டான்.
'நீ இப்ப விருந்தாளி இல்ல. எங்களில ஒருத்தன். அதால நீயே சுயமா எடுத்துக் குடிக்கலாம். அப்பிடி இல்லை என்ர கையாலதான் வாங்கிக் குடிக்க வேணுமெண்டா நான் எது எண்டாலும் ஊத்தித்தரத் தயார்.' என்றாள் இரதி.
'இரதி நீ பொய் சொல்லுறா.' என்றான் சுரேன்.
'என்ன பொய் சொன்னனான்?' புரியாமற் கேட்டாள் இரதி.
'ம்... எது வேணுமெண்டாலும் தருவாயோ?'
'எது வேணுமெண்டாலும் ஊத்தித் தருவன் எண்டுதான் சொன்னன்.'
'நாங்கள் அந்த ஊத்திய மறந்திட்டுக் கதைப்பமே?' கெஞ்சும் தொனியில் கேட்டான் சுரேன்.
'நல்ல ஆள் இவர். என்ன மடக்கிறீங்களா? ஆனாலும் நீங்க இப்பிடித் தனிய வந்து என்னோட சேட்டை விடக் கூடாது.' என்றாள் இரதி.
'பெம்பிள தனியா இருந்தாத்தான் ஆம்பிளை சேட்டைவிட வசதியா இருக்கும்.'
'ம்... நல்ல நினைப்பு. செருப்படி விழுந்தாலும் வெளிய தெரியாமல் இருக்கும். உந்தச் சேட்டைக்கெல்லாம் ஒரு கால நேரம் இருக்குது.' என்றாள் இரதி.
'ம்... அப்படியெண்டா உனக்குச் சம்மதம் எண்டு எடுத்துக்கொள்ளலாம். ஆனா இந்த மூதேவி காலம்தான் குறுக்க வந்து நிற்குது எண்டுறா?' என்றான் சுரேன்.
'சுரேன் உன்ர விவாதம் காணும்... நீ றுமுக்குப் போ?' என்ற வண்ணம் அவன் கையைப் பிடித்து இழுத்துத் தள்ளினாள். அந்த இழுப்பின் மென்மையை ரசித்த வண்ணமே,
'சரி நான் போறேன். ஆனா ஒரே ஒரு கிஸ் தாந்தாப் போறன்.' என்று தனது கன்னத்தைக் காட்டினான் சுரேன்.

'போடா...' என்றுவிட்டு வெட்கத்தைக் காட்டிக் கொள்ளாது சரளத்திற்குப் பக்கத்தில் போய் நின்று கொண்டு வெளியே பார்த்தாள் இரதி. வெளியே அப்படிக் கதைத்தாலும் அவள் மனம் அவனைப் பார் அவன் கேட்டதைக் கொடு என்று காமனுக்கு ஏவல் செய்தது. அவள் வெளியே பார்த்துக் கொண்டு நிற்கவே சுரேன் துணிவோடு எழுந்து சென்று பின்புறம் அழுந்த அவளை இறுக அணைத்தான். வாய் ஒரு மொழி பேச உடல் ஒரு மொழி பகிர இரதி அவனின் அணைப்பில் இருந்து விடுவித்துக் கொள்வதற்குப் பதிலாக அவனது கையை தனது வயிற்றுடன் சேர்த்து அழுத்தினாள். அவன் அவளைத் தன்னை நோக்கித் திருப்பினான். சுகன்யாவும் விக்கியும் இருவரையும் தேடிக் கொண்டு அறைக்கதவு அருகே வரும் போது முத்தமிடும் மெல்லிய சத்தம் கேட்டதான பிரமை அவர்களுக்கு. அது பிரமையா நிஜமா என்கின்ற திகைப்பில் சிறிது நேரம் அப்படியே சுகன்யாவும் விக்கியும் என்ன செய்வது என்பது புரியாமல் நின்றனர். பாதை வழியே சென்ற குறும்பு நிறைந்த மாணவன் ஒருவன் இவர்கள் கதவிற்கு முன்பு சிலை போல் நிற்பதைப் பார்த்துவிட்டு கதவைத் தட்டிவிட்டுச் சென்றான். சுரேன் தன்னைச்

*சமாளித்துக் கொண்டு வந்து கதவைத் திறந்தான். இரதி எதுவும் நடவாத, எதுவும் தெரியாத குழந்தை போல் முகத்தை வைத்துக் கொண்டு இருந்தாள். விக்கியும் சுகன்யாவும் உள்ளே போவதா அல்லது வேறு எங்காவது போவதா என்பது புரியாது நின்றனர். இவர்கள் அப்படியே யோசித்துக் கொண்டு நிற்பதைப் பார்த்த இரதி,*

*'என்ன நாங்கள் குடும்பமா நடத்துறம். அப்படியே வாசல்ல திகைச்சுப் போய் நிற்கிறீங்க, கையப்பிடிச்சு இழுத்தாத்தான் உள்ள வருவீங்களோ?' என்றாள் இரதி. சிவபூசையிற் கரடி புகுந்த மன நிலையில் இருவரும் உள்ளே சென்று முள்ளில் அமர்வது போல் சோபாவில் அமர்ந்தனர். இரதிக்கு அருகில் சுரேன் இப்போது நெருக்கமாகவே அமர்ந்திருந்தான். விக்கியும் சுகன்யாவும் எதிர்ச் சோபாவில் அமர்ந்திருந்தனர்.*

*அறையினுள் இனம் புரியா அமைதி குதியன் குத்தியது. அந்தக் குதியனின் திமிரை முதலில் விக்கியே அடக்கி ஒடுக்கினான்.*

*'உங்களைத் தொந்தரவு பண்ணீட்டமோ?'*
*'நாங்கள் ஏதோ குடும்பம் நடத்தினமாதிரிக் கதைக்கிறியள்? நீங்கள் ஒண்டும் தொந்தரவு செய்யேல்ல.' என்று இரதியி மீண்டும் அவசரமாகப் பதில் அழித்தாள்.*
*'இல்லை எண்டாலே ஏதோ இருக்கு எண்டுதான் அர்த்தமாம். நீங்கள் வேணுமெண்டா கதைச்சுக் கொண்டு இருங்கோ. நாங்கள் சுத்தித் திரிஞ்சுபோட்டு அங்க விக்கியின்ர அறையில் இருக்கிறம்.' என்றாள் சுகன்யா நமட்டுச் சிரிப்போடு.*
*'அதெல்லாம் தேவையில்ல. கதைக்கவேணும் எண்டா நாளைக்குக் கதைக்கலாம்.' என்று கூறிக்கொண்டே சுரேன் எழுந்துவிட்டான். இரதியைவிட அவன் தங்களின் இணைவை உரித்துக் காட்டினான். அதற்கு ஆண்மகன் என்னும் கலாசாரத் துணிவு காரணமாய் இருந்திருக்கலாம். இரதி இந்த உறவை மறைக்க விரும்புகிறாள். உறவு என்பது தெரிந்துவிட்டால் பெண்ணிற்குப் பிரிவு என்பது வரமான தெரிவு அல்ல. அவளுக்கு இது மறைத்துவிடக்கூடிய விடயம் அல்ல என்பது விளங்கியது. அதை அவளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. சுரேனுடன் விக்கியும் வெளியே சென்றுவிட்டான். சுகன்யாவுக்கு இப்போது இரதியுடன் துணிந்து கதைக்கலாமெனத் தோன்றியது.*
*'இரதி நீ பெரிய கள்ளியடி. முழுப் பூசனிக்காயா சோத்துக்க மறைக்கப் பாக்கிறா?' என்றாள் சுகன்யா.*
*'சீ... நான் அப்படி என்னத்த மறைச்சுப் போட்டேன்?' அவசரமாக வந்த பதிலில் சற்றுக் கோபம் தெறித்தது. சுகன்யா அதைப் பொருட்படுத்தவில்லை.*
*'உங்கட காதல் லீலையத்தான் பொத்திப் பொத்தி மறைக்கிறாய்.' என்றாள்.*
*'நாங்கள் காதல் பண்ணுறதாயே நீ முடிவுபண்ணீட்டியா?'*
*'அப்ப சுரேன் போதிதர்மனாக அறையிக்க பூட்டிப்போட்டு இருந்து நீ தர்ம போதனை பெற்றியா? அல்லது தாய் பிள்ளையாக, அண்ணன் தங்கையாகப் பாசம் கொண்டாடினீங்களா?'*
*கேட்ட வண்ணம் சுகன்யா செல்லமாக இரதியின் தலையில் குட்டு ஒன்று வைத்தாள்.*
*'சரியடி நாங்கள் லவ் பண்ணுறம் எண்டே வைச்சுக்கொள். இதில என்ன சங்கதி இருக்குது?' என்றாள் இரதி.*
*'அப்படி வா வழிக்கு. நான் லவ் பண்ணுறதைத் தப்பெண்டு நினைக்கேல்ல. அதை மறைக்கிறதுதான் தப்பு.' என்றாள் சுகன்யா.*
*'அது சரி நீ மாத்திரம் சும்மாவே இருக்கிறா? பூனையில்லாத வீட்டில எலியின்ர கொண்டாட்டம் மாதிரி உங்களுக்கு.'*

*'ஆ கடவுளே! சும்மாய் இருக்கிறவங்களையும் முடிஞ்சு வெச்சிடுவா போல இருக்குது.'*
*'நானா முடியிறன்? நீங்களா முடிஞ்சுபோட்டு நாய் போல இழுபடுறியள். கெதியா அது வெளிச்சத்துக்கு வந்திடும். அப்ப பாக்கிறன்டி உன்ன...'*
*'பார்... பார்... அது சரி சுரேனுக்கு உன்னைவிட வயது குறைவெல்லே?'*
*'ச்... அவையவிட நாங்கள் இரண்டு பேருமே வயது கூடின ஆட்கள்தான். ஆனா இங்கே வயசெல்லாம் இதுக்கு ஒண்டும் தடையில்ல? இங்கே எப்படி நடக்கினம் எண்டு பாத்தாதானே? எங்களை மாதிரி வயசு எல்லாம் பாக்கினமே? அதை விடு, விட்டா எங்கட மன்மதன்கள் இப்பவே குடும்பம் நடத்தத் தயாரா இருக்கினம்.' என்றாள் இரதி.*

★

*'என்னவோ எல்லாம் சொல்லுறா. எனக்கெண்டா இதெல்லாம் சரியாப்படேல்ல. யாரையும் நம்பேலாது. கழட்டி விட்டா கந்தலாகிறது நாங்கள்தான்.' என்றாள் சுகன்யா.*
*'சரியாய்ச் சொன்னாய் சுகன்யா. எது சரி எது பிழையெண்டுறது ஒவ்வொருத்தரையும் பொறுத்தது. அது காலத்திற்கு, இடத்திற்கு, சமுதாயத்திற்கு, ஏன் ஒவ்வொரு தனிமனிதனுக்குமே மாறுபடும். அந்த நிர்ணயம் அவனவன் மனதிலதான் இருக்குது. என்னைப் பெறுத்தவரையிலும் நான் இதைச் சரி எண்டுதான் நினைக்கிறன். இரெண்டுபேர் நேசிச்சா இந்த வயது, சாதி, அந்தஸ்து எல்லாம் தேவையில்லாதது எண்டு நினைக்கிறன். இஞ்ச இருந்து கொண்டும் அதுக்கெல்லாம் பயப்பிட முடியாது. விபத்து நடந்தா அதை யார் தடுக்க முடியும்?' நீண்டதோர் உரையாற்றி முடித்தாள் இரதி.*
*'தாங்ஸ். எனக்கு நித்திரை வருகுது, நான் படுக்கப்போறன்.' என்ற வண்ணம் சுகன்யா யோசனையோடு நழுவினாள்.*

*படுக்கைக்குச் சென்ற சுரேனால் படுக்க முடியவில்லை. மலர்க்கணைகள் அவன் உடலையும் மனதையும் புண்ணாக்கின. வேதனை பெருக்கின. விக்கியும் விரகத்திற்கு விலக்கில்லை என்பதாகத் தவித்தான். இயற்கை இட்டபணிக்கு இணங்க மறுக்கும் ஒவ்வொரு உயிருக்கும் அவஸ்தைதான். அதைத் தூண்டுவதாக பாடசாலையில் அடிக்கடி பார்க்கும் அந்தக் காட்சிகள். சாதாரணமும் அசாதாரணமும் அவரவர் தளத்தைப் பொறுத்தது. கையைத் தொட்டாலே கரண்ட் அடிப்பதாகக் கதைவிட்டவர்களுக்குக் காமனின் கடூளிய தண்டனைக் கிடைத்திருந்தது.*

*

*சுரேனும் விக்கியும் கடூளிய தண்டனை முடித்துக் காலைச் சாப்பாடு முடித்துவிட்டனர். அதன் பின்பு சென்று தங்கள் பகுதிக்குள் உள்ள இளைப்பாறும் அறையில் அமர்ந்தனர். இரதி, சுகன்யா, எலிசபெத், நீனா ஆகிய நால்வரும் ஒரு ஆசிரியர் வீட்டிற்குச் சென்றபடியால் இவர்கள் இருவருமே அந்த அறைக்குள் மனதிற்குள் வெந்த வண்ணம் இருந்தனர். அந்த அலுப்பைப் போக்க கடுதாசியில் அமெரிக்க விளையாட்டு ஒன்றை விளையாடினர். அப்போது தொலைபேசி அருகில் நின்ற ஏலினும் குன்னரும் முத்தமிடத் தொடங்கினர். அது அவர்களை மீறி உச்சத்திற்குச் சென்றது. அவன் கைகள் அவள் மார்பில் வன்மமாகப் பதிய இருவரும் தள்ளாடிச் சமாளித்த வண்ணம் குன்னரின் அறைக்குள் புகுந்து கொண்டனர். சுரேனுக்கு இவர்களைப் பார்க்க இரதியின் நினைவு வந்தது. அது*

இன்பத்தையும் துன்பத்தையும் அவன்மீது பாயவிட்டது. அவலமான பெருமூச்சோடு அவர்கள் தொடர்ந்தும் கடதாசி விளையாடினார்கள். தொலைபேசி திடீரென அலறியது. சுரேன் எழுந்து சென்று தொலைபேசியை எடுத்தான். அதில் குன்னாருடன் கதைக்க முடியுமாவென நொஸ்கில் கேட்கப்பட்டது. அவன் போனை வைத்துவிட்டுப் போய் குன்னாரின் அறைக் கதவைத் தட்டினான்.

எந்த நிலையில் அவர்கள் இருந்திருப்பார்களோ தெரியாது என்கின்ற கலக்கம் சுரேனுக்கு. குன்னார் ஒரு துவாயைக் கட்டிக் கொண்டு வந்து கதவைத் திறந்தான். 'போன்.' என்று சுரேன் கூறவும் அவசரத்தில் கதவை மேலும் திறந்துவிட்டச் சென்றான். கட்டிலிலே எலின் மறைத்தும் மறையாமலும் வாழிப்பான ரோஜா உடலைக் காட்டியும், காட்டாமலும் படுத்திருந்தாள். சுரேனின் கண்கள் சிறிது நேரம் மன்மத ஓவியத்தைப் பூமியில் பார்த்ததாக அங்கே நிலைத்தன. பின்பு அது அநாகரிகம் என்பதை உணர்ந்து அவசரமாக அங்கிருந்து வந்துவிட்டான். வந்தவன் அதை விக்கிக்கும் கூறினான். சிறிது நேரம் சென்ற பின்பு விக்கி சுரேனைப் பார்த்து,

'ஒண்டு கேட்பன் நீ கோவிக்க மாட்டியே?' என்றான்.
'இல்ல சொல்லு.' என்றான் சுரேன்.
'இரதியோட எப்பிடி? நீ ஏதாவது இவைய மாதிரி?'
'போடா டேய் மடையா... நீ வேற கொதியைக் கிளப்பிக் கொண்டு. அந்த அளவுக்கு நாங்கள்வர வருசம் ஆகும் போல இருக்குது. அதுக்கிடையில ஸ்கூலும் முடிஞ்சிடும். கிஸ் மாத்திரம்தான் இப்ப தாறாள்.' என்றான் சுரேன்.
'அதுக்கு மேல?'
'மண்ணாங்கட்டி.'
'கெதியா அது நடக்கட்டுமென நல்லாசி கூறுகிறேன்.'
'அது சரி நீ பிரமசாரியா இருக்காத. சுகன்யா தனிய உன்னோடதானே இருப்பாள். நான் இரதியோட அவேன்ர அறைக்க கதைச்சுக் கொண்டு இருக்கேக்க உனக்குக் கிடைக்கிற ரைம வேஸ்ற் பண்ணிடாத.' என்றான் சுரேன்.
'எனக்கும் விருப்பம்தாண்டா. ஆனாப் பயமாய் இருக்கு.'
அதற்கு மேல் அவர்களுக்குக் கதைக்கச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. நோர்வேநாட்டு மாணவர்கள் வந்து இவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

## 4. பழக்கமும் நெருக்கமும்

பளகப் பளகப் பாலும் புளிக்கும் என்பது காதலால் பிழைக்க. இரதியும் சுரேனும் பெண்கள் பகுதிக்குள் தங்கள் இருப்பை மாற்றிக் கொண்டது போல நாள்கள் நகர. அதே போல் சுகன்யாவும், விக்கியும் ஆண்கள் பகுதியில் தங்கள் நேரத்தை விஸ்தரிக்க. சுகன்யா தற்போது நாணம் தொலைத்து விக்கியோடு தொட்டுப் பழகும் தோழியானாள். இருந்தும் காதலிப்பதாய் வாய் திறக்கவில்லை. முத்தம் என்கின்ற அன்பு முத்திரை குற்றவில்லை.

சுரேனும், விக்கியும் இவற்றிற்கு முடிவுகட்ட வேண்டுமென எண்ணிக் கொண்டனர். அதற்கான நாளை ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர். அன்று சனிக்கிழமை. மதியச் சாப்பாடு முடிந்த பின்பு இரதியுடன் சுரேன் சென்றுவிட சுகன்யாவை தனது அறைக்கு அழைத்துச் சென்றான் விக்கி.

சுரேன் இரதியின் அறைக்குள் செல்லும் போதே அவள் கவனிக்காத கணத்தில் கதவைப் பூட்டிவிட்டுச் சென்றான். இரதி சோபாவில் அமர்ந்தாள். சுரேனும் அவள் பக்கத்தில் போய் ஒட்டியவாறு அமர்ந்து கொண்டான். சில நிமிடம் இரட்சதப் பிடியோடு மௌனம் அங்கே ஆட்சி செய்தது. பின்பு சுரேனே அதை விடுவித்தான். இரதியின் முகத்தைப் பார்த்த வண்ணம் அவளின் இடது கையை தனது வலது கைமேல் வைத்தான். பின்பு அதைத் தனது இடது கையால் தடவிய வண்ணம்.

'இரதி ஐ லவ் யு சோமச்.' என்றான்.

சிறிது நேரம் அவனை உணர்ச்சி பொங்கக் காதல் ஒழுகும் கண்களால் பார்த்துக்கொண்டு இருந்துவிட்டு 'உந்த வசனம் எல்லாம் எனக்குத் தெரியும். எண்டாலும் ஐ லவ் யு ரூ.' என்றாள்.
'உண்மையாவே?' என்றான் சுரேன் அதிசயம் போல.
'பெரிய விளையாட்டுதான்.' என்றாள் இரதி.
'நீதான் இடமே தரேல்ல.' அவனின் இரட்டை அர்த்தம் அவளுக்கு விளங்கச் சிரித்த வண்ணம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள் இரதி. சுரேன் விடுவதாய் இல்லை. மெதுவாக அவள் அருகே நகர்ந்து ஒட்டியபடி நின்று கொண்டான். அவனது இதழ்கள் இரதியின் காது மடல்களுக்கு முத்தம் கொடுக்க அவள் சாளரத்தை நோக்கித் திரும்பிக் கொண்டாள். சுரேன் அவளை இன்று விடுவதாக இல்லை. இரண்டு கைகளாலும் அவளைச் சுற்றி இறுக்கிக் கொண்டு முகம் காது கழுத்தென முத்தம் கொடுத்துக் கொண்டே சென்றான்.

இரதியிடமிருந்து எந்த எதிர்ப்பும் வரவில்லை. இயற்கையின் வீரியத்தை அவளால் எதிர்க்க இயலவில்லை. எதிர்க்கும் விருப்பு அவளுக்கு இம்மையும் இல்லை. காமன் கரும்போடு வந்தானோ அனலை உடலிற்குள் புதைத்தானோ இரதிக்குப் பூலோக இன்பம் இவ்வளவு இதமா என்கின்ற மலைப்பு. அவள் அதன் திகைப்பில் மருவினாள். சுரேன் கைகளால் அவளது வதனத்தைத் திருப்பினான். இரதி இன்ப வேதனையோடு முனுகினாள். சிணுங்கினாள். காமரசத்தோடு இசைத்தாள். அவளின் திரும்பிய வதனத்தைக் கைகளில் ஏந்தித் தனது கண்களில் காமத்தைக் கதிர்களாக எற்றி, அந்தக் கதிர்களால் அவள் கண்களைத் துளைத்துப் பருகினான். அது அடங்காமல் போகவே ஆவேசமாகவே இதழ் பதித்தான். இரதி மன்மத லோகத்து மகிழ்ச்சி இதுதான் என்பதைக் கற்றாள். இருந்தும் அவள் கைகள் அவனைத் தடுக்க வீரியத்தோடு செயற்பட்டது. சுரேன் அதைப் பொறுத்துக் கொள்ளமுடியாது அவளைப் பார்த்து,

'நீ என்னை லவ் பண்ணுறியா?' என்று சந்தேகிப்பது போலக் கேட்டான்.
'என்ன கேள்வி இது?' விலகாத வண்ணமே கோபமானாள் இரதி.
'சரி உண்மையாவே என்ன நம்பினா... விரும்பித்தான் வந்தா... மற்றக் கை என்ன பண்ணுதாம்? அந்தக் கையின்ர அணைப்பிற்குள் ஆயிரம் அர்த்தமும், அமைதியும், ஆனந்தமும் இருக்கும் தெரியுமோ?' என்றான் சுரேன்.
'சொறி... என்ர ராசாவே. ஓகேயா?' என்று கூறிய வண்ணமே தனது இரண்டு கைகளாலும் சுரேனை இரதி இறுக்கினாள். அதற்கு மேல் அவனைப் பார்க்க முடியாது கண்களை மூடிக் கொண்டாள். மெதுவாகச் சோபாவில் இரதியைச் சாய்த்து மேலே மலைப் பாம்பு போலப் படர்ந்தான் சுரேன்.

சிறிது நேரம் சரசத்தின் உச்சத்தில் பார்சுகுள் இருந்து அதை எடுத்து அவள் கண் எதிரே ஆட்டிக் காட்டினான். அவள் வெட்கத்தால் முகம் சிவந்தாள். பின்பு உறை சுரேனின் அங்கத்தை மறைக்கும் துணிவில் பல சங்கமிப்புகள் அங்கு அரங்கேறியது.

★

*விக்கி 'சிலோ' என்கின்ற மிருகத்தைப் போல. இதுவரை முத்தம் கொடுக்க வேண்டும் என்று நினைப்பதோடு அவன் நின்றுவிட்டான். தங்களின் நேசமும் துணிவும் மத்திமம்தான் என்று அவன் நினைத்தான். ஆசையிருந்தாலும் துணிவு காலை வாருவது அவனுக்கு எரிச்சலைத் தந்தது. தற்போது பக்கத்தில் இருந்த சுகன்யாவிடம்,*

*'என்னப் பிடிச்சிருக்கே?' என்று தயங்கிய வண்ணம் கேட்டான்.*
*'ம்.' என்றாள் சுகன்யாவும் தயக்கத்தோடு.*
*'சுவாரசியமாய்ச் சொல்லுற மாதிரித் தெரியேல்லையே?' என்றான்.*
*இதைக் கேட்ட அவள் விக்கி எதிர்பார்க்காத நேரத்தில் திடீரென ஒரு முத்தம் அவன் கன்னத்தில் வைத்தாள். பின்பு அவனைப் பார்த்து,*
*'இப்ப சரியா?' என்றாள். அவளின் அந்தச் செய்கை விக்கிக்கு அதிக துணிச்சலை கொடுக்கவே அவளை இறுக அணைத்து முத்த மழை பொழிந்தான். சுகன்யா திடீரென எழுந்து கொண்டாள்.*
*'எய் ஏன் எழும்பீட்டா?' என்கின்ற அவனது குரலில் கோபம் இருந்தது.*
*'உங்களோட இருந்தா நீங்க என்னைக் கெடுத்திடுவீங்கள்.' என்றாள் சுகன்யா.*
*'அப்ப நல்ல பிள்ளையா எங்க போகப்போறா?' என்றான் விக்கி.*
*'இரதியிட்ட.'*
*அதைக்கேட்ட விக்கி நமட்டுச் சிரிப்புச் சிரித்தான்.*
*'ஏன் அப்படிச் சிரிக்கிறீங்க?'*
*'பிறகென்ன உனக்கு பாத்தாத்தான் சூடு பிறக்குமாக்கும்? அவள் இப்ப அவனோட...'*
*'நான் நம்பமாட்டன்.'*
*'நம்பாட்டிப் போய்ப் பார்.' என்றான் விக்கி.*
*சிணுங்கிக் கொண்டே விக்கியின் அருகே வந்து அமர்ந்தாள் சுகன்யா. விக்கி மீண்டும் இறுக அணைத்துத் தயிரியமாக அவளுக்கு முத்தம் கொடுத்தான். அவள் வேண்டாம், வேண்டாம் என்று சிணுங்கிய வண்ணமே அவனை அணைத்துக் கொண்டாள். தனிமை கிடைத்திருந்தது. யார் என்ன கூறமுடியும் என்கின்ற துணிவு இருந்தது. தடைகள் அற்ற காட்டாறாய் அவர்கள் உணர்ச்சி பொங்கியது. பொங்கிவழிய அவர்களின் இயற்கைக்கான சேவகம் செயற்கைத் தடைகளோடு நடைபெற்றது.*

*எல்லா உயிரினங்களும் ஒரு விடயத்தில் மாத்திரம் நிச்சயம் இன்பமடைகின்றன. கலவி என்னும் ஒரு உணர்ச்சி பிரவாகம் எல்லா உயிரிடத்தும் இன்பத்தை விளைவிக்கிறது. கலவி கிட்டாத போது வேதனை, வெறுப்பு, போட்டி, எரிச்சல் மனிதர்களுக்கு அதிகமாகவே ஏற்படுகிறது. மீண்டும் அது கிட்டும் போது ஆயிரம் மடங்கு இன்பம் பிறக்கின்றது. கலவியால் வரும் விளைவைப் பற்றி மனிதனைத் தவிர எந்த உயிரினமும் பயப்படுவதில்லை. நவீன மனிதன் அவற்றைப் பாரமாய் எண்ணுகிறான். உலகத்தின் பொருளாதார, சமுக அமைப்பு அப்படி உள்ளது. இரவு இன்பத்தில் திளைத்த சந்தோஷத்தில் மூழ்கினாலும் இரதிக்கும் சுகன்யாவுக்கும் இந்தக் கவலை சுமக்கும் பெண் என்பதால் இருக்கத்தான் செய்தது. உறைகள் ஒன்றும் அசைக்கமுடியாத உத்தரவாதம் அல்ல என்பது விளங்கியது.*

*ஒரு இரவால் ஒன்றும் பாதிப்பு நேர்ந்து விடாது. அதற்கு அமையவே அவர்கள் பாதுகாப்பை பாவித்திருந்தார்கள். ஆனால் அது ஒரு நம்பகம் அற்ற சாதனம் என்பது அவர்களின் கணிப்பு. சாப்பிட்ட பின்பு வகுப்பறைக்குள் வந்து இருவரும் அமர்ந்தனர். சுகன்யா மெதுவான குரலில் அந்தச் சந்தேகத்தை எழுப்பினாள்.*

*'இது போதுமெண்டு நினைக்கிறியே?' என்றாள் சுகன்யா.*
*'அதுக்கு என்ன செய்யலாம்?'*
*'பில்சும் பாவிச்சாத்தான் நல்லது எண்டு நினைக்கிறன்.' என்றாள்.*
*'ஆனா பில்ஸ் இங்கே சும்மா தரமாட்டாங்கள். முதல்ல டொக்ரரிட்டப் போகோணும்.' என்றாள் இரதி.*
*'அப்ப போக வேண்டியதுதான்.' என்றாள் சுகன்யா.*

*அவர்கள் முடிவு செய்துகொண்டனர். சுரேனுடன் கதைக்க, அவனும் அதைச் சரி என்று ஒப்புக் கொண்டான். அவன் மருத்துவரிடம் போக ஏற்பாடும் செய்தான். இரதி சுரேனுடன் சல்லாபித்து முடித்துவிட்டு இருக்கச் சுகன்யா வந்தாள். இரவு பத்து மணியாகிவிட்டது. இதற்குமேல் அறைக்குள் இருப்பதற்கு அனுமதி கிடையாது. சுரேன் தங்கள் பகுதிக்குச் சென்றான்.*

*இருவரும் விளக்கை அணைத்துவிட்டு இரவு உடுப்பை மாற்றிக் கொண்டு படுக்கைக்குள் தஞ்சம் அடைந்தனர். வெகு நேரம் புரண்டு புரண்டு படுத்தும் இரதிக்கு நித்திரை வரவில்லை. சுகன்யா நிம்மதியாய்த் தூங்கினாள். இரதிக்குப் பழைய நினைவுகள் படமாய் மூளைக்குள் விரிந்தது. தான் இப்போது நடந்து கொள்வது நியாயமானதா? என்கின்ற எண்ணம் அவளை வாட்டியது. இலங்கையில் இருக்கும் போது இருந்த மனதின் பக்குவம் என்ன? அதன் கட்டுப்பாடென்ன? ஆரம்பக் காலத்தில் பாடசாலைக்கு ஒரு கிலோமீற்ரர் நடந்துதான் செல்ல வேண்டும். இரதி நடக்கும் போது தலை நிமிர்ந்து கண்டவனையும் பார்த்துக் கதைத்ததில்லை? அவள் பொதுவாக யாரிடமும் தேவையில்லாது கதைப்பதில்லை.*

*அந்தக் கட்டுப்பாடு ஒரு நாள் தரைமட்டமானது. அவனைக் கண்டு தன் மனதை இழந்தாள். மனதை அவனிடம் பறிகொடுத்த பின்பு அவனோடு ஆசையாகக் கதைத்தாள். மகிந்தன் மிகவும் கெட்டிக்காரன். பாடசாலையில் அவளைவிட மூன்று வகுப்புக்கள் முந்திப் படித்துக் கொண்டிருந்தவன். அழகன் என்று ஒரு வார்த்தையில் கூறுவதா அல்லது அவனது ஒவ்வொரு அங்கத்தையும் வருணிப்பதா? என்பது இரதிக்குப் புரியவில்லை. அவனது ஒவ்வரு அங்கத்தையும் வருணிக்கத்தான் இரதிக்கு ஆசை. அந்த அளவிற்கு மொழி வளம் அவளிடம் இல்லையே என்கின்ற ஏக்கம்.*

*அவன் அழகில், படிப்பில், விளையாட்டில் என்று எல்லாவற்றிலும் முதலிடம்தான். விளையாட்டுப் போட்டி வந்தது. ஒரே இல்லத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஒரு தாய் பிள்ளைகளான உணர்வு. இரதியின் இல்லம் அவனை இல்லத் தலைவனாய் இருத்தி அழகு பார்த்தது. இரதிக்கு இதைவிட வாழ்வில் இன்பம் வேண்டுமா என்கின்ற உணர்வு. விளையாட்டுப் பயிற்சிகள் நடந்தன. அப்பொழுது தன்னை அறியாமல் 'கமோன் மகேன் கமோன் மகேன்.' என்று என்று உணர்ச்சி வசத்தால் இரதி கூவினாள். மகிந்தனை மகேன் என்றுதான் கூப்பிடுவார்கள். அப்படிக் கூப்பிடுவது இரதிக்குச் சர்க்கரையாக இனித்தது. இவள் கூவுவதை அவளது குறும்புக்கார நண்பியான வனிதா கவனித்துக்கொண்டே இருந்தாள். பின்பு மகேனின் காதில் தவறாது ஓதிவிட்டாள். அன்று பயிற்சிகள் முடிந்துவிட்டன. மானவர்கள் முந்தியடித்துக் கொண்டு வெளியேறினர். இரதியால் அப்படி விரைவாக வெளியேற முடியவில்லை. இவள் வகுப்பறையை ஒழுங்கு செய்ய வேண்டியிருந்தது. அதை முடித்து விட்டுத் தப்பினோம் பிழைத்தோமென வெளியே ஓட்டமும் நடையுமாக வந்தவளை மகேன் மடக்கினான். இரதிக்கு ஒன்றும் புரியவில்லை. அவள் தங்கியபடி சுவரோரமாக நின்றாள்.*

*'உன்ர இன்றஸ்ரப் பற்றி வனிதா சொன்னாள்.' என்றான் மகேன். அப்போதுதான் இரதிக்குக் கூவலின் வினை புரிந்தது. புரியவும் கடுமையான தாகம் எடுத்தது. கால்கள் துவண்டன. அந்த இடத்தைவிட்டு ஓட வேண்டும் போல் இருந்தது. ஓட முடியவில்லை. அவள் அசையாது மரமாக நின்றாள்.*

*'ம்... ஏன் ஒண்டும் பேசாமல் நிக்கிறா?' அவளைச் சுவரோடு நெருக்குவது போலச் சாய்ந்தான் மகேன். இரதிக்கு ஒரே பதட்டமாய்ப் போய்விட்டது. அவள் பேசாது நின்றாள்.*
*'உனக்கு என்னப் பிடிச்சிருக்கா? இல்லாட்டி ஒரே இல்லம் எண்டதுக்காக சும்மா கத்தினாயா?' இரதிக்குப் பதில் சொல்ல நாக்குப் புரள மறுத்தது.*
*'ஓ கே. நீங்க ஒண்டும் கதைக்கிறியள் இல்ல. சிலவேள உங்களுக்கு என் மேல விருப்பம் இல்லாமல் இருக்கலாம். அப்பிடியே?' என்றான் அவன்.*
*'இல்ல.' என்றாள் பதற்றத்தோடு.*
*'அப்ப?'*
*'உங்கள நான் நல்ல பிறண்சா நினைக்கிறன்.' அதன் பின்பு அவன் இரதியைச் சுவரோடு அழுத்தவில்லை. அந்த இடத்தைவிட்டு வேகமாக நகர்ந்து சென்றான். தான் எல்லாவற்றையும் கெடுத்து விட்டதாக இரதிக்கு தன்மீது கோபம் வந்தது.*

★

*அந்தச் சம்பவத்தின் பின்பு இரண்டு மாதம் நட்பு நட்பாகவே இருந்ததான ஒரு பிரமை. பின்பு இரதி மன்மதன் பால் இழுபட்டு அதில் இருந்து புரளத் தொடங்கினாள். மனதிற்குள் நட்பு இல்லைக் காதல் என்றாள். அதை மகேனிடம் கூறவில்லை. வனிதாவிடம் அதைக் கூறினாள். அடுத்த மணித்தியாலமே மகேனுக்கு அது கூறப்பட்டது. அன்று வீட்டிற்குச் செல்லும் போது மகேன் இரதியைச் சைக்கிளில் ஏற்றிச் சென்றான். அப்படிச் செல்லும் போது,*
*'ஏன் இப்பிடி நீ பயப்பிர்றா?' என்றான்.*

*'நான் பெம்பிளப் பிள்ளை... உங்களை மாதிரியா சேறு கண்ட இடத்தை உழக்கித் தண்ணி கண்ட இடத்தைக் கழுவ. எனக்குப் பயமா இருந்திச்சு. அதுதான் சரியாகவும் இருக்கும். ஆனா, உங்களை நான் விரும்பிறது மாத்திரம் சர்வ நிச்சயம். நீங்கள் என்ன உண்மையா விரும்பிறியளோ? மனம் திறந்து சொல்லுங்கோ...' என்றாள் அவள்.*

*'விரும்பமலே சைக்கிள்ள ஏத்திக் கொண்டு வாறன்? விரும்பாமலே இவ்வளவு கதையும் உன்னிட்டக் கேட்டனான்?'*
*'நீங்கள் திட்டம்போட்டு என்னைச் சைக்கிளில ஏத்திக் கொண்டு வாறீங்க.'*
*'ம்... எல்லாருக்கும் இருக்கிற ஆசைதான். ஒரு குட்டிய சைக்கிளில ஏத்தியாறதில ஒரு கிக்கு இருக்குத்தானே?' என்றான் அவன்.*
*'அந்தக் கிக் தொடர்ந்து இருந்தாச் சரி. குறிப்பா என்னில மட்டும்.' என்று உரிமை கோரினாள் இரதி.*

*மகேன் அவளைப் பத்திரமாக அவளின் வீட்டில் இறக்கிவிட்டுச் சந்தோசத்தில் கை பிடிக்காது சைக்கிள் ஓட்டிச் சென்றான். அன்றில் இருந்து தொடங்கிய உறவு இடையிலே எந்தத் தகவலும் இல்லாமல் போகும் என்று இரதி எண்ணியிருக்கவில்லை. எங்கே போனானோ? யாரிடம் போதனை கேட்டானோ? எப்படித்தான் மனம் மாறியதோ? மகேன் சொல்லாமற் கொள்ளாமல் இயக்கத்திற்காக இந்தியாவுக்குச் சென்றுவிட்டான். ஏன் அப்படிச் செய்தான்? அவன் மூளையை யார் அப்படி மாற்றினார்கள் என்று அவளுக்குப் புரியவில்லை? வகுப்பில் இருந்த மற்றைய மாணவர்கள் கூறித்தான் அவளுக்கு அது தெரிந்தது.*

இயக்கத்திற்குச் செல்லும் அவா காதலைக்கூட மறக்கடித்து விட்டது. எப்படி மகேனால் அவளிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் இயக்கத்துக்குப் போகத் தோன்றியது? போனவன் உடனே எந்தத் தொடர்பும் கொள்ளவில்லை. பத்து மாதங்களின் பின்பு அவனிடம் இருந்து ஒரு கடிதம் வந்தது.

அவன் வீரத்திலகம் அணிந்து இலங்கைக்குத் திரும்பி வருவதாக அந்தக் கடிதத்தில் எழுதி இருந்தது. இரதிக்கு ஏகப்பட்ட கொண்டாட்டம். மனம் தாங்காச் சந்தோஷம். அவன் எங்கோ தங்கிவிட்டு இரண்டு மாதத்திற்குப் பின்பு வீட்டில் அவள் தனியே நிற்கும் போது வந்தான். இரதிக்கு அழுகையே வந்துவிட்டது. அழுதுகொண்டு வீட்டிற்குள் ஓடினாள். உள்ளே நின்று அழுதுவிட்டுத் திரும்பி வந்தாள். மீண்டும் அழுகை வந்தது. அழுத வண்ணமே,

'நீங்கள் என்னத் துப்பரவா மறந்திட்டிங்க.' என்று குற்றம் சாட்டினாள்.
சிறிது மௌனத்திற்குப் பின்பு,
'உன்ன மறக்கேல்ல, ஆனா அதைவிட இப்ப தாய் நாட்டைக் கூடுதலா நேசிக்க வேண்டி இருக்குது. அது எனக்கு எங்கட அற்ப வாழ்க்கையைவிட முக்கியமாப் படுகுது. அது பிழையெண்டா என்னை மன்னிச்சுக்கொள்.' என்று அவன் விடுதலைத் தத்துவம் பேசினான். இரதிக்குக் கோபம் வந்தது.
'அப்ப அன்னை பூமியவே காதலிச்சிருக்கலாமே? துவக்க கையில எடுத்த உங்களுக்கு காதல் இனி எதுக்கு? இல்லாட்டி மற்றவையின்ர மனசுதான் விளங்குமோ?' அவள் கோபத்தில் படபடத்தாள்.
'நீ சொன்னாலும் சொல்லாட்டியும் நான் அன்னை பூமியை உயிரைவிட மேலாக் காதலிச்சுக்;கொண்டுதான் இருக்கிறன். இருப்பன். அவளின்ர விடுதலைக்குப் பிறகுதான் எனக்கு மற்றதெல்லாம்.'
என்று அவன் உறுதியாகக் கூறிவிட்டு இரதியின் பதிலை எதிர்பாராது விருட்டெனப் போய்விட்டான்.

அவன் போன திசையைப் பார்த்தே இரதி பல மணித்தியாலம் புருசனை இழந்த பெண்டாட்டி போலக் இடையறாது கண்ணீர் விட்ட வண்ணம் நின்றாள். இரதியால் மகேனை மறக்க முடியாமல் இருந்தது. அவன் அப்படிக் கூறியதாலோ என்னவோ அவன் மேல் இன்னும் அதிக காதல் ஏற்பட்டது. அதன் பின்பு அவனிடம் இருந்து எதுவும் வருவது இல்லை. எங்கு உள்ளான் எப்படி இருக்கிறான் என்பதே இரதிக்குத் தெரியவில்லை. இரதியின் மனம் அவனை எண்ணி எண்ணியே மெழுகாய் உருகியது.
இதற்கிடையில் நோர்வேயில் இருந்து இரதியின் அண்ணா போல்க்கைஸ்கூலில் இடம் எடுத்து எல்லா ஏற்பாட்டையும் செய்துவிட்டார். இரதிக்கு என்ன செய்வது என்று புரியவில்லை? இரதியின் அம்மா நீ போயே தீரவேண்டும் என்று பிடிவாதமாய் நின்றாள். பொருளாதார விடுதலைக்காகப் புறப்பட்டவர்களில் ஒருத்தியாக அவளும் ஐரோப்பா நோக்கிப் புறப்பட்டாள்.

நோர்வேக்கு வருவதற்கு முதல் நாள் மகேன் கேள்விப்பட்டு வீட்டிற்கு வந்தான். 'நீ போய் நல்லாப் படி. உங்கள மாதிரி ஆட்கள் பிறகு நாட்டுக்குத் தேவையா இருக்கும்.' என்று கூறினான். இரதிக்கு உயிர் போவது அதைவிட மேலெனத் தோன்றியது.

'என்னைக் கலியாணம் செய்யுங்க. இயக்கத்தை விட்டு விலகி வாங்க?' என்று அவள் அவனிடம் கெஞ்சினாள்.
'இரதி அது முடியாத காரியம். நீ போய் நல்லாய்ப் படி. முடிஞ்சதும் இங்க திரும்பி வா. நீ திரும்பி வந்த பிறகு சுதந்திர நாட்டில நாங்கள் கலியாணம் செய்யலாம்.

அதுக்கிடையில நான் ஏதாவது யுத்தத்தில போயிட்டா வேற ஒருவனைக் கட்டிக் கொண்டு சுகமாய் வாழ். அதுதான் நீ எனக்கும் நாட்டிற்கும் செய்யிற உதவியா இருக்கும்.'

என்று மிகவும் நம்பிக்கையாக அவன் கதைத்தான். அவன் கனவு வசனம் பேசுவதாக அவளுக்குத் தோன்றியது. அதன் பின்பு சிறிது நேரம் இரதியை பார்த்துக் கொண்டு நின்றான். பின்பு எதுவும் சொல்லாது சென்றுவிட்டான். இரதி கவலை தாங்க முடியாது வாயைப் பொத்திக் கொண்டு கதறி அழுதாள். அழுது அழுது ஓய்ந்த போது கனவு வசனம் இனி வாழ்க்கைக்குப் பொருந்தாது எனத் தோன்றியது.

தாய் கூறியபடி இரதி நோர்வே வந்து சேர்ந்து விட்டாள். அவள் மனது நிறைய மாறிவிட்டது. பலதை அடியோடு மறந்து விட்டது. சில நாட்கள் அண்ணாவோடு தங்கி இருந்தாள். அப்போது அண்ணா 'மகேனை மறந்திடு. உனக்கு வயசு ஏறிக்கொண்டே போகுது. இலங்கப் பிரச்சனை இப்ப தீராது. இன்னும் பத்து இல்லாட்டி இருபது வருசமாயிடும். அப்ப யார் உயிரோட இருப்பினமோ தெரியாது. அதுவரையும் நீ மகேனுக்காகக் காத்திருக்கவும் முடியாது. நீ எப்ப உன் மனசை மாத்திச் சரியெண்டு சொல்லுறியோ அப்ப நான் நல்ல மாப்பிளையாய்ப் பேசிக் கலியாணம் செய்து வைக்கிறேன்.' என்றார். இரதியின் மனது கலியாணம், காதல் என்பனவற்றை இப்போது நம்புவதாய் இல்லை. இரதி தனது மனதில் அடக்கமானதைக் கிளறிக் காட்டி சுரேனைக் கவலைப்படுத்தவும் விரும்பவில்லை. பட்டினி கிடப்பதையோ, பத்தினி வேஷத்தையோ அவள் உண்மையெனவும் நம்பவில்லை. கிடைத்தால் அனுபவிப்பேன் என்கிற செயலை மகேனை மறப்பதற்கான தாரக மந்திரமென எண்ணிக் கொண்டாள். இங்கே வந்த பின்பு தான் மாறிய வேகம் அவளுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. அண்ணாவுக்குப் பேரம் பேசும் வேலையில்லாது போனது.

## 5. மனவோட்டம்

'இன்பத்தில் திளைத்துக் கிடக்கும் போது எவ்வளவு விரைவாகக் காலம் என்கின்ற ஆயுட் காட்டி மறைந்து விடுகின்றது? ஏன்? எப்படி இது சாத்தியம்? மனம் சில விடயத்தில் முழுமையாக ஒன்றுவதாலா? புற நிகழ்ச்சி மனதைத் தீண்டாததாலா?' இரதிக்கு இது விளங்கவில்லை. 'இன்பத்தில் திளைப்பவனுக்கு மாத்திரம் காலம் விரைவாகக் கரைந்து செல்கின்றதா? ஒரு இலட்சியத்தை மனதில் இருத்திக் கொண்டவனுக்கும் உலகை மறந்த நிலையில் அப்படித் தானே இருக்கும்? நாம் ஈடுபடும் விடயத்தில் முழுமையாக ஒன்றும் போது காலம் என்னும் ஆயுள் காட்டி போவது தெரிவதில்லையே? தியானத்தில் பல மணி நேரம் இருப்பதும் இப்படித்தானே? காலம் என்பது ஒரு மாயமானானா ஆயுள். அதன் அசைவு மனதைப் பொறுத்ததா?' என்பதாக இரதி எண்ணினாள். வாழ்க்கையின் கன்னி இன்பத்தை அனுபவிக்கத் தொடங்கிய இரதியின் காலமும் விரைவாகவே சென்றுவிட்டது. இரதி சிலவேளை தன்னைப் பற்றி எண்ணிப் பார்ப்பாள். தான் எப்படி இருக்கின்றேன் என்பதை எண்ண அவளுக்கு வியப்பாக இருக்கும். சுரேன் இப்பொழுது அவளது உயிர் நாடியான ஜீவன்.

'காதலா இது?' அவளால் அதைக் காதல் என்று ஏற்றுக் கொள்ள முடியவில்லை. மகேனுடன் அது முடிந்து விட்டதாய் எண்ணினாள். 'காதல் அவனோடு முடிந்திருந்தாற் காமமா இது?' அசிங்கமான வார்த்தையாக அவளுக்குத் தோன்றியது. அதுதான் உண்மை என்பதும் புரிந்தது. காமத்தை தீர்த்துக் கொள்ள பூண்டுகொள்ளும் முலாங்கள் பல. அதில் முக்கியமானது காதல். வழி பலதாக இருந்தாலும் வினை கடைசியாக ஒன்றாகத்தான் இருக்கிறது. சமுதாய வரம்புகளை

*நகர்த்திக் கொண்ட சமுதாயத்தில் வாழும் சுதந்திரத்தை அனுபவிப்பதில் தவறில்லை என்பது இரதியின் எண்ணம். அவள் தனது உரிமையையும், சுதந்திரத்தையும் எடுத்துக்கொண்டாள். நாட்டு நினைவை மறந்து, மகேனின் உறவைத் தொலைக்க முயன்றாள்.*

*சுகன்யா நித்திரைவிட்டு எழும்பிளூ இரதியை வெறித்துக் கொண்டிருந்தாள். பத்து மாதங்கள் இன்பமாய் ஓடிவிட்டது. இனிப் பிரிவின் காலம். அத்தால் வந்த துயரம். சுகன்யாவுக்குப் பெரும் கவலையாக இருந்தது.*

*'நாங்கள் இனி ஒண்டா இருக்கேலாது.' என்றாள் கவலையாக. அவளுக்குத் தன்னோடு அல்ல அவனோடு ஒன்றாக இருக்க முடியாது என்பதே உண்மை என்பது இரதிக்குப் புரிந்தது.*
*'அதுக்கு என்ன செய்யேலும்? போய் முதல்ல முகத்தைக் கழுவு.' என்றாள் இரதி.*

*சுகன்யா எழுந்து அலுப்போடு முகம் கழுவச் சென்றாள். சுகன்யா கூறிய விடயத்தின் உண்மை இரதியையும் பாதிக்கவே செய்தது. காமம் கழியும் போதும் சிலவேளை காதல் விளையத்தான் செய்கிறது. விடுமுறை காலத்தில் எல்லோரும் ஒஸ்லோவில் சந்தித்துக் கொள்ளும் வாய்ப்பு நிச்சயம் கிடைக்கும். வேலை தேடி அங்கேதான் எல்லோரும் படையெடுப்பார்கள். அடுத்த முறையும் ஒரே இடத்திலேயே பாடசாலை எடுக்க வேண்டும். அதற்கு ஏற்ப கடுமையாக முயற்சிக்க வேண்டும் என்று மனதிற்குள் இரதி திட்டமிட்டுக் கொண்டாள். அவள் தனது திட்டத்தை தன்னுடன் வைத்துக் கொள்ளாமல் மற்றவர்களிடமும் கூறினாள். அதை அவர்களும் வரவேற்றனர். பாடசாலை முடிந்தது. அன்று இரவு இரும்பு இரதத்தில் பிரிய முடியாத மனதின் சுமையோடு பிரிந்து ஒஸ்லோ சென்றனர். பதிவு செய்யப்பட்ட பயண அறையில் கடைசிக் கணங்களைத் தவறவிடாத அவர்கள் தவிப்பு.*

## *6. புதிய வாழ்க்கை*

*இரண்டு மாதங்கள் ஒஸ்லோவின் சுறுசுறுப்பில் மாயமாக மறைந்து போனது. பாடசாலைகள் மீண்டும் ஆரம்பமாகி விட்டன. சுகன்யாவுக்குத் 'துறம்சோ' என்னும் இடத்தில் பாடசாலை கிடைத்துச் சென்றுவிட்டாள். விக்கி, இரதி, சுரேன் ஆகியோருக்கு இன்னும் பாடசாலை கிடைக்கவில்லை. பாடசாலை கிடைப்பதில்தான் விசாவிற்கான உத்தரவாதம் தங்கி இருக்கிறது. பின்பு வேலை வாய்ப்பு பெறும் அலுவலகத்திற்குச் சுரேன் அவர்களை அழைத்துச் சென்றான். அங்கே பல மணிநேரக் கனினி அலசலின் பின்பு மூசோன் என்னும் இடத்தில் மூவருக்கும் பாடசாலை கிடைத்தது. மூவருக்கும் அது ஒரு வருட உறுதியான நோர்வே வாழ்க்கையின் சந்தோசத்தை தந்தது. சுகன்யாவைத் தனிக்க விட்டதில் அவர்களுக்குக் கவலையாக இருந்தது. நோர்வேயைப் பொறுத்தவரைப் பாடசாலை செல்லாவிட்டால் படிக்க வந்தவர்களுக்கு விசா கொடுக்கமாட்டார்கள். அவர்கள் அங்கே போய் இறங்கும் போதே காற்று மலைகளைப் புரட்டுவதாய்த் தாண்டவம் ஆடியது. புழுக்கத்தில் காற்று இன்பமாக இருக்கலாம். குளிரில் காற்று அவர்களுக்குக் குண்டூசிகள் எறிவது போல் ஏறியது.*

*அவர்கள் நடுநடுங்க விரைவாகவே தமக்குரிய தங்கு விடுதியைக் கண்டு பிடித்து அறைகளைப் பெற்றுக் கொண்டனர். குளித்துவிட்டு ஒஸ்லோவில் இருந்து கொண்டு வந்த பொருட்களை வைத்து எல்லோரும் சேர்ந்து குட்டிச் சமையல் ஒன்று போட்டுச் சாப்பிட்டனர். அதன் பின்பு இரதியும் சுரேனும் சுதந்திரமாகவும்,*

அவசரமாகவும் இரதிக்குக் கொடுக்கப்பட்ட அறைக்குள் தஞ்சமடைந்தனர். விக்கி தனியே தனது அறைக்குள் படுத்த வண்ணம் சுகன்யாவை நினைத்தான்.
சில நாட்களில் இரதிக்கு வேறு ஒரு கொஸ்டலில் இடம் கிடைத்தது. அவள் அங்கே போகவேண்டியதாகிற்று.

அன்று பின்னேரம் சுரேனும், விக்கியும் இருந்த விடுதிக்குச் சென்ற இரதிக்கு ஒரு சந்தோஷமான செய்தி காத்திருந்தது. அந்த இடத்தில் அவர்களைவிடப் பல இலங்கையர்கள்; குடியிருந்தனர். நாட்டுப் பிரச்சனை காரணமாக இங்கே அவர்கள் வந்திருக்கிறார்கள். இங்கே உள்ள ஒரு தொழிற்சாலையில் வேலை செய்து வாழ்க்கை நடத்துகின்றனர். இந்தச் செய்தி மூவருக்கும் மகிழ்ச்சியைத் தந்தது. சுரேன் தனது அடக்க முடியாத ஆவலை முதலில் வெளியிட்டான்.

'இரதி நாங்கள் சமைச்சு வைச்சிருக்கிறம். கெதியாச் சாப்பிடு. சாப்பிட்டோண்ண அங்க போவோம்.'
'ம்... என்று இழுத்த வண்ணமே சமையல் அறைக்குச் சென்றாள் அவள். விக்கி வெளிக்கிட்டுப் போவதற்குத் தயாராயிருந்தான். சுரேன் தயாராகி விட்டாலும் இரதி இன்னும் தனது அலுவலை முடித்துக் கொண்டு வரவில்லை. அதைப்பார்த்த சுரேனுக்கு சலிப்பு வந்தது.
'வாடி என்னடி செய்யிறாய் இன்னமும்?' என்று கத்தினான்.
'பொருடா.' என்று கூறிய வண்ணமே இரதி வந்தாள்.

இப்படி மரியாதை கடந்த நட்பாக அரல்புரசலாகப் போன வருடமே பேசத் தொடங்கி இருந்தாலும் இப்போது சாதாரண விடயத்திற்கு எல்லாம் அப்படி அன்பொழுகப் பேசத் தொடங்கிவிட்டார்கள். இந்தப் பேச்சை செவிமடுத்துக் கொண்டிருந்த விக்கி அலாதியாகச் சிரித்தான்.

மூவருக்கும் அவர்கள் வீட்டைத் தேடிப்பிடிப் பிடிப்பதற்குள் காதுமடல், கால், கை மரமாக விறைத்துப் போய்விட்டன. அவஸ்தையோடு அந்த வீட்டைத் தேடிச் சென்றார்கள். வீடு ஒரு பள்ளத்திற் கண்களிற் பட்டுவிடாது இருந்தது. வெளியே பார்க்கச் சகிக்கவில்லை. பாழடைந்த வீடு போன்று காட்சி தந்தது. இவர்கள் எப்படி இதற்குள் வசிக்கின்றார்கள்? என்கின்ற கேள்வியோடு வீட்டின் முன்பு போய் நின்றார்கள். வீட்டின் பின்னே அவர்களது தொழிற்சாலை இருந்தது. வீடு பேய் வீடு போல் இருந்தாலும் வேலைக்குப் போவதற்கு நான்கு எட்டுப் போதும். இங்கே உள்ள குளிரின் பேயாட்டத்திற்கு வீடு கிட்டவாக உள்ளது நல்லதோர் வரமே. சுரேனின் ஓங்கிய அழைப்பிற்குக் கதவு திறந்து கொண்டது.
இருபது வயது மதிக்கத்தக்க, பொது நிறமான, சுமாரான அழகுடைய வாலிபன் ஒருவன் புன்முறுவல் வீசிய வண்ணம் வந்து நின்றான். அவனது பற்கள் வரிசையாகவும், வெண்மையாகவும் இருந்தன. அவன் சிரிப்பு மறாமலே 'உள்ள வாங்கோ.' என்றான். அவர்கள் எல்லோரும் அவசரமாக உள்ளே சென்றனர். வீட்டில் இருந்தவர்கள் வேலையால் வந்து சாப்பிட்ட பின்பு தொலைக்காட்சி பார்த்துக்கொண்டு இருந்தார்கள். அதைவிடப் பெரிய அளவில் தொலைக்காட்சிப் பெட்டி இல்லை என்பது போல ஒரு பெரிய தொலைக்காட்சிப் பெட்டி.
இரதிக்கு பெரும் அதிர்ச்சியாய் இருந்தது. வெளியே இருந்த பேய்த் தோற்றத்திற்கும் உள்ளே கண்ட காட்சிக்கும் அபார வித்தியாசம் தெரிந்தது. கதவு திறந்துவிட்ட வாலிபன் உள்படு, எல்லோரும் சாறம் அணிந்திருந்தனர். அவர்கள் நாட்டைவிட்டு பலவாயிரம் மயில்களுக்கு அப்பால் இருந்தாலும் தங்கள் பழக்கவழக்கத்தில் விட்டுக் கொடுப்பை விரும்பவில்லை போல் இருந்தது. புன்சிரிப்பு வாலிபன் கோப்பி தயாரித்தான். இருபது வயது மதிக்கத்தக்க இன்னொரு வாலிபன் அவர்களை ஆர்வமாய்ப் பாரத்துக் கொண்டிருந்தான்.

*சுரேன் முதலில் தனது பெயரைக் கூறி அறிமுகமானான். பின்பு இரதியும் விக்கியும் தங்கள் பெயரைக் கூறி அறிமுகமானார்கள். இதற்கிடையில் புன்சிரிப்பு வாலிபன் பிஸ்கெற் கொண்டு வந்து வைத்த வண்ணமே தனது பெயர் 'வேணு.' என்றான். பின்பு சமையல் அறைக்குள் சென்று வந்தவன்,*

*'பிஸ்கெற் எடுங்க.' என்று ஒரு தட்டை நீட்டினான்.*
*'தாங்ஸ்.' ஒரு பிஸ்கெற்றை எடுத்துக்கொண்டு,*
*'இந்த வீடு வெளியில பாக்க நல்ல பழசா இருக்குது. ஆனா உள்ளுக்க சோக்கா இருக்குது.' என்றாள் இரதி. அதைக் கேட்ட வேணு,*
*'சீ... சீ... இரண்டாம் உலகமகாயுத்தம் நடக்கேக்க ஆக நாற்பது வயசுப் பழசாம்.' என்றுகூறி நகைத்தான். இரதி அவன் கதையைக் கேட்டுத் தனக்குள் இரசித்தாள்.*
*'நீங்க எந்த இடம்?' என்று தொடங்கினார்கள். பின்பு குடும்பத்தைப் பற்றிக் கேட்டனர். அதைக் கேட்டு முடிந்த பின்பு கதைப்பதற்கு ஒன்றும் கிடைக்கவில்லை என்பதான பெரும் மௌனம் திடீரென அங்கே ஆட்சிக்கு வந்தது. அந்த மௌனத்தை வேணுவே சொற்கொண்டு உடைத்தான்.*
*'எப்படி இருந்திச்சு போல்கைஸ்கூல்?' அந்தத் தொடக்கத்தோடு அங்க கலகலப்பான சம்பாசனை களைகட்டியது.*

*வேணு ஆவலோடு 'ஸ்கூல் போறது நல்லதே?' என்று கேட்ட கேள்விக்கு இரதி நீண்ட விளக்கவுரை கொடுத்தாள். பின்பு கதைத்துக்கொண்டு இருந்துவிட்டதில் நேரம் போனதே அவர்களுக்குத் தெரியவில்லை. இரண்டாவது செய்தி போவதைப் பார்த்துவிட்டு இரதி எழுந்து கொண்டாள். அதைப்பார்த்த மற்றவர்களும் சந்தோஷமான ஒரு பொழுது என்று எண்ணிய வண்ணம் எழுந்து சென்றார்கள். வெளியே குளிர் அவர்களுக்காகக் காத்திருந்தது.*

## *7. உறைந்துகிடக்கும் உண்மை*

*'சிரித்துச் சிரித்துக் கதைக்கவேண்டும். மாறாத சந்தோசத்துடன் வாழவேண்டும் மென்பதுதான் இரதியின் ஆசையாக இருந்தும்ளூ அவள் கடும் முயற்சி செய்தே சிரித்தாள். மனதில் ஆழமாகப் பதிந்துவிட்ட வேதனை. இன்னும் எத்தனை நாள் என்னும் கேள்வியோடு அனலாக அடிமனதில் அது குமுறும்.*

*நோர்வேக்கு வந்து குளிரைக் கண்டவுடன் அதன் தாக்கம் கூடியது. தலைச் சுற்றோடு இடைக்கிடை நெஞ்சில் நெருடும் வலியும் அவளைப் பயமுறுத்தியது.*
*இடைக்கிடை தோல் நஞ்சுண்ட கண்டனின் நீலம் காட்டியது.*
*ஊரில் இருக்கும்போது ஏற்கனவே சில முறை இப்படி நீலம் தோன்றி மயக்கம் ஏற்பட, வைத்திய சாலைக்குச் சென்றதுண்டு. அப்போதெல்லாம் அவளின் அம்மா, அல்லது அப்பாவிடம் மட்டுமே மருத்துவர்கள் ஏதோ கதைத்தனர்.*
*இவள் ஒருமுறை மருத்துவரிடம் 'என்ன வருத்தம் எனக்கு?' என்று கேட்க அவர் சுவாச நோய்தான், குணமாகிவிடும் என்று மழுப்பினார். இவள் அதை நம்பவில்லை. விஞ்ஞானம், சுகாதாரம் போன்ற பாடங்களில் மனித உடலைப் பற்றி அவளால் அறியமுடிந்தது. தனக்கு வரும் களைப்பு, தலைச்சுற்று என்பதின் ஆணிவேர் அவளுக்குப் புலப்பட்டத் தொடங்கியது. இரத்தம் நீலமாவதற்கான காரணத்தை அவள் புத்தகங்களில் தேடி அறிந்து கொண்டாள். அந்த அறிவின் அடிப்படையில் தனது இதயச்சுவரில் ஒட்டை இருக்க வேண்டும் என்பதைக் கண்டுபிடித்தாள். அதை அவர்கள் மறைக்கின்றார்கள் என்பதான முடிவுக்கு அவள் வந்தாள்.*

பின்பு ஒரு முறை வைத்தியசாலைக்குச் சென்ற போது மருத்துவர் தனது அறைக்குள் வருமாறு அவளை அழைத்தார். உள்ளே தனியே சென்று அவர் காட்டிய இருக்கையில் அமர்ந்தாள். உண்மை சொல்லும் வரைக்கும் தான் எழுந்து போவதில்லை என்று அன்று மருத்துவரிடம் அடம்பிடித்தாள். மருத்துவருக்கு மறு வழி இருக்கவில்லை. அவளது வருத்தம் பற்றி விளக்கம் கொடுத்தார். ஓட்டை மிகவும் சிறிதென்றும், ஒரு அறுவை சிகிச்சை செய்தால் குணப்படுத்தி விடலாம் என்றும், பின்பு அவள் மற்றவர்களைப் போல் வாழலாம் என்றும் மருத்துவர் அவளுக்குச் சமாதானம் சொன்னார். அவரது சமாதானம் அப்போது இரதிக்குத் தேவைப்படவில்லை.

அவள் தனது வருத்தத்தைப் பற்றி மகேனிடம் மட்டும் கூறிக் கவலைப்பட்டாள். அவனும் சமாதானம் சொன்னான். அதுதான் அவனை அப்படி மாற்றியதா என்பது இன்றும் அவளுக்குப் புரியவில்லை. வருத்தத்தைப் பற்றித் தெரிந்திருந்த அவனே தாங்கமுடியாத கவலை ஏற்படுத்திவிட்டுத் தாய் நாடு என்று சென்றுவிட்டான். இரதி இந்தக் கவலைகளில் இருந்தெல்லாம் விடுபட வேண்டும் என்று எண்ணினாள். அந்த முயற்சி பலனளித்தாலும் முற்றாக மறக்க முடியாத கவலை வடுக்கள் காய்ந்த தடங்களாக அழிய மறுத்து அடிமனதில் இடம்பிடித்துவிட்டன. இங்கே வந்த பின்பு தனது குறையை எதற்காகப் பறையடிக்க வேண்டும் என்று தவிர்த்துவிட்டாள். சுரேனோடு சில வேளைகளில் ஈடுகொடுக்க முடிவதில்லை. களைத்தது மூச்சு நின்று விடுவது போல் திணறல் எடுக்கும். ஒருவாறு போல்கைஸ்கூலில் சமாளித்துவிட்டாள். இப்போது நிலைமை மாறிவிட்டது. மயக்கம் அடிக்கடி வருகிறது. நீல வண்ணம் உடல் பூராகவும் அடிக்கடி படர்கிறது. இனியும் தாமதித்தால் உயிருக்கே ஆபத்தாகும் என்பது அறிவுறுத்தப்பட்டது. இரதிக்கு கடைசி நாட்களோ என்கின்ற பயம் தோன்றியது. தனக்கு என்ன வருத்தம் இருக்கிறது என்பதைச் சுரேனிடம் முழுமையாக ஒத்துக்கொள்ள அவளுக்கு மனம் வரவில்லை. மருத்துவர் மீண்டும் எல்லாம் விபரங்களும் விசாரித்தார். வேறு ஒரு பெரிய வைத்தியசாலைக்குப் பரிசோதிப்பதற்கு அனுப்பி வைத்தார். அங்கே பரிசோதனை முடிந்து. இது முக்கியமானதோர் சத்திர சிகிச்சை என்பதால் விரைவிலேயே நாளும் குறித்துக் கொடுத்தனர்.

சத்திர சிகிச்சைக்கு இரண்டு தினங்கள் இருந்தன. அந்தப் பெரிய மருத்துவமனைக்குப் போவதற்கு அவள் தயாரானாள். சுரேன் அப்போதுதான் அவளை உடும்புப் பிடியாகப் பிடித்தான். எதற்குப் போகிறாள் என்கின்ற உண்மையைக் கூறவேண்டியதாயிற்று. வேறு எவரிடமும் சொல்லக்கூடாதென சத்தியம் வாங்கிக்கொண்டு கூறினாள். இரதிக்கு ஒரு ஆணைவிட அதிக துணிவு இருந்தது. இடையிடையே மட்டும் பயம் எட்டிப் பார்த்தது. சில வேளைக் கடைசி யாத்திரையோ என்று எண்ணும் போது கதி கலங்கினாள். சுரேனுடன் அனுபவித்த இவ்வளவு காலத்தையும் எண்ணித் திருப்திப்பட்டாள்.

உலகத்தில் மனிதர்களாக அதுவும் தமிழர்களாகப் பிறந்து, தாம்பத்தியம் என்பது என்னவென்று தெரியாது, நாற்பது வயதுவரை வாழ்க்கையை வீணடித்துக்கொண்டு இருப்பவர் ஆயிரமாயிரம். அவர்கள் அனுபவிக்காது விட்ட கணங்கள் இனி ஒரு போதும் அவர்களைத்தேடி வரப்போவதில்லை. அவர்கள் வாரிசுகள் பெரியவராகும்போது அவர்கள் உயிரோடும் இருக்கப் போவதில்லை. அவர்களைவிடத் தான் துணிந்தவள், கெட்டிக்காரி என்றே அவளுக்குத் தோன்றியது. நூறு ஆண்டு சன்னியாசியாய் வாழ்வதிலும், ஒரு இரவு இன்பம் அனுபவித்து உலகிற்கு ஆற்ற வேண்டிய கடமையை செய்த திருப்தி மேலானது என்று அவளுக்குத் தோன்றியது. அது பிறப்பாக மட்டும்தான் இருக்க வேண்டும் என்பதில்லை என்பதும் அனுபவிப்பாக இருக்கலாம் என்பதும் அவள் எண்ணம்.

இனி தான் மடிந்தாலும், வாரிசு ஒன்று இல்லாவிட்டாலும், பருவாய் இல்லையென அவள் எண்ணினாள்.

சுரேன் தானும் மருத்துவமனைக்கு வருவதாய் அடம்பிடித்தான். இரதி அடியோடு அதை மறுத்துவிட்டாள். சுரேனைப் பார்த்துக்கொண்டு நிம்மதியாய் இருக்க முடியாது. இந்த இன்பம் இடையறுந்து விடுமோ என்கின்ற துன்பம் அதிகமாகும் என்பது அவள் முடிவு.

அன்பாக, கருணையாக, கனிவோடு செய்யும் தொழிலில் நோர்வே நாட்டுத் தாதிகள் பெற்ற தாயைவிட மேலாக நோயாளிகளைப் பராமரித்த விதம் இரதிக்குப் பெரும் உவப்பாக இருந்தது. இரதி இலங்கையில் வைத்தியசாலைகளைக் கண்டவள். அதுவும் தனியார் மருத்துவமனைகளைக் கண்டவள். மருத்துவமனையென்றால் கடுகடுப்பாய் இருக்க வேண்டும் என்பது அவர்கள் எண்ணம். இங்கே அம்மாக்களைவிட அன்பான தாதிகள்.

மருத்துவர் இவளிடம் வந்து கையொப்பம் வாங்கும்போது என்னவோ போல் இருந்தது. தானே தனது கழுத்தில் சுருக்கைப் போடுவது போல ஒரு பிரமை உண்டானது. அது சுருக்காகவோ, மலையாகவோ மாறுவது மருத்துவரின் கெட்டித்தனத்தைப் பொறுத்தது. அவளின் அந்த நினைவுகள் நீடிக்கவில்லை. அதற்குள் ஒரு தாதி சிரிக்கச் சிரிக்கப் பேசி இரதிக்கு ஊசியைப் போட்டு விட்டாள். சட்டென உலகம் இருண்டு போய்விட்டது. அதன் பின்பு ஒளியான அதிசய உலகம் அவளுக்காக விரிந்தது. இரதிக்கு உடலில் இறக்கை முளைத்திருந்தது.

அடுத்த நாள் அவள் கண்விழித்த போது எழுந்து இருக்க முடியாமல் இருந்தது. சுருக்கல்ல மாலைதான் மருத்துவர் போட்டிருக்கிறார் என்பது அப்போது புரிந்தது. மார்பிலே நீளமாய் கட்டுப்போட்டு இருந்தார்கள். தாதிகள் அவள் விழித்ததையடுத்து அவளுக்கு வேண்டிய உதவிகள் செய்தார்கள். ஒரு கிழமையில் இளை வெட்டி இரதியை அவளது இடத்திற்கு அனுப்பி வைத்தனர்.

இரதிக்கு இப்போது புத்துணர்ச்சி தோன்றியிருந்தது. இனி எதற்கும் தான் பயப்பட வேண்டிய அவசியம் இல்லையென அவள் எண்ணினாள். எப்படியும் எதையும் அனுபவிக்கலாம் என்கின்ற சுதந்திரம் கிடைத்ததாக ஆனந்தித்தாள். இரதி பாடசாலைக்கு மீண்டும் போகத் தொடங்கினாள். அன்று பாடசாலை இடைவேளையின் போது பணம் எடுக்க வங்கிக்குச் சென்றாள். அதிர்ச்சி அவளுக்காகக் காத்திருந்தது. வேணு அங்கே நின்றான். இரதி அவனுக்கு அருகே போகவும்,

'உங்களைக் கொஞ்ச நாளாய்க் காணக் கிடைக்கேல்லை?' என்றான்.
'ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தேன்.' என்றாள் இரதி.
'இவ்வளவு நாளும் ஆஸ்பத்திரியிலயே இருந்த நீங்கள்? அப்படி உங்களுக்கு என்ன வருத்தம்?'
சிறிது நேரம் வேணுவைப் பார்த்த இரதி,
'இதய வருத்தம்.' என்றாள்.

நம்பாதவன் போல் வேணு இரதியைப் பார்த்தான். இரதி தனது ஐக்கேற்றை கழட்டினாள். பின்பு சுவேற்றரை இழுத்து மார்பில் ஒட்டப்பட்டிருந்த நீட்டான பிளாஸ்ரரைக் காட்டினாள். இப்போது அவன் கண்களில் ஆச்சரியம் பளிச்சிட்டது.

*'இவ்வளவு பெரிய ஒப்பிறேசனே? எங்களுக்கு ஒரு வார்த்தைகூடச் சொல்லேல்ல?' என்று அங்கலாயித்தான்.*

*'நான் ஒருத்தருக்குமே சொல்லேல்ல.' என்றாள் இரதி.*
*'சரி பின்னேரம் வீட்டுக்கு வந்து பாக்கிறம்.' என்று கூறிவிட்டுச் சென்றான் அவன்.*

*சொல்லி வைத்தது போல் எல்லோரும் பிற்பகல் இரதியின் வீட்டிற்குப் படையாக வந்திருந்தனர். சுரேனும் கூட இருந்தான். சுரேனே பால் சுட வைத்து அனைவருக்கும் கோப்பி கலக்கிக் கொடுத்தான். வேணு இரதியைப் பார்த்து மிகவும் கவலைப்பட்டான். பின்பு பல கதைகளையும் கதைத்தனர். இடையில் சுரேன் யாரையோ சந்திக்க வேண்டும் என்று கூறிவிட்டு வெளியே சென்றுவிட்டான். ஏழுமணி போலவே வேணுவும், மற்றவர்களும் சென்றனர். இராமு அதன் பின்பும் சிறிது நேரம் இருந்து தேவைப்படாத ஆறுதல் சொன்னான். இரதி ஒப்புக்கு அதைத் தவிர்க்க முடியாது கேட்டுக்கொண்டு இருந்தாள். அடிக்கடி அவனது விழிகள் இரதியை ஆபாசமாய் பார்ப்பதையும் அவள் கவனித்தாள். இதே பார்வை சுரேனுக்கு மட்டுமே உரியது என்பது அவளது அப்போதைய எண்ணம். கலியாணம் செய்து பிள்ளைகளும் பெற்றுக்கொண்ட இராமுவின் வெட்கமற்ற சலனத்தைப் பார்க்க அவளுக்குப் பிடிக்கவில்லை.*

*அவனிடம் காமமும், இச்சையும் வயதை மீறித் தாண்டவமாடியது. அதுகூடத் தவறு என்று அவள் நினைக்கவில்லை. விருப்பம் இல்லை என்பதை நசுக்காய் தெரிவித்த பின்பும் தின்னப் போகும் மிருகத்தின் வேட்கையோடு பார்ப்பது அவளுக்கு அறவே பிடிக்கவில்லை. அவனை எப்படியாவது தவிர்க்க வேண்டும் என்று இரதி எண்ணியவண்ணமே,*
*'என்ன இராமண்ணை உங்களுக்கு வீட்டில வேலை குறைவு போல இருக்குது?' என்று கேட்கவும் குடம் குடமாக அசடு ஊற்றிய வண்ணமே எழுந்து மனமில்லாது வெளியே சென்றான்.*

★

*வெள்ளி மாலை தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் இரதி பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் நினைவுகள் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் லயிக்காது சுரேனைப் பற்றிய நினைவுகளில் அந்தரித்தது. சுமனுக்குத் தற்போது திடீரென இலங்கையில் உள்ள மச்சாளிடமிருந்து கடிதங்கள் வருவது அவளுக்குப் அறவே பிடிக்கவில்லை. கடிதங்கள் காதல் கடிதமாகிவிடுமோ என்கின்ற சந்தேகம் இரதியிடம் இருந்தது. அதற்கு துபம் போடுவது போல சுரேன் மச்சாளின் அழகில் சொர்க்குவதும் அவளுக்குப் புரிகின்றது. இன்னும் இரதியை ஆசையோடு அணைப்பதை அவன் விட்டுவிடவில்லை. அவன் அணைப்புப் பல பெண்களை வைத்திருக்கும் ஒரு ஆணின் தாபமா என்கின்ற சந்தேகம் இரதிக்கு உண்டு. எவனும் நிரந்தரமாய் தன்னோடு இருக்கமாட்டானோ என்கின்ற பயமும், வெறுப்பு மனதில் இரையுண்ட மலைப் பாம்பாகப் புரள்கிறது. தன்னோடு சேர்ந்து இன்னும் சில காலம் உடலுறவை அனுபவித்துவிட்டு தன்னைக் கைகழுவி விடுவானோ என்கின்ற சந்தேகம் அவளுக்கு எழுந்தது.*

*தன்னிடம் பல குறைகளை அவன் காணலாம் என்று இரதிக்குத் தோன்றியது. அதனால் தன்னை புறக்கணித்து மைத்துனியை மணந்து கொள்ளலாம் என்று அவள் எண்ணினாள். அவளின் எண்ணங்கள் குழப்பமாக நீண்டன. எப்போதாவது அவன் அப்படிச் சொல்லியதுண்டா? என்று அவள் தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். அவன் அப்படிச் சொல்லவில்லை என்பதே அதற்குப் பதில் என்பது புரிந்தது.*

*அதேவேளை எதற்காக மச்சாளின் கடிதத்தை அவளிடம்  காட்டுகிறான் என்பதும் புரியவில்லை. சில காலத்தில் அவன் தன்னை பிரிந்து சென்று மச்சாளை இங்கே எடுக்க முயற்சிக்கலாம் என்றும் இரதிக்குத் தோன்றியது. அது எப்படிச் சாத்தியம்? என்கின்ற கேள்வியும் அதனோடு எழுந்தது. படிப்பு முடிந்து வேலையைப் பெற்ற பின்புதானே அப்படி எடுக்கமுடியும்? என்கின்ற உண்மையும் புரிந்தது.*

*அதுவரையும் சுரேனுக்குத் தான் தேவைப்படுவேன் என்பதை அறிந்துகொண்டாள். உறவு என்னும் இந்தக் கனவுக்காக வாழ்வில் எப்படிக் காய் நகர்த்தவேண்டும் என்று குழப்பமாக இருந்தது.*

*சிந்தனையில் ஆழ்ந்திருந்தவளைக் கதவில் தட்டும் சத்தம் நினைவுக்குக் கொண்டு வந்தது. கதவைத் திறக்க வேணுவும், இராமும் நின்றனர். வந்தவர்களுக்குக் கோப்பி கலந்து கொடுத்தாள். கோப்பியை அவசரமாக இராமு குடித்து முடித்தான். பின்பு தான் எங்கோ செல்லவேண்டுமெனக் கூறியவண்ணமே இராமு எழுந்து சென்றுவிட்டான்.*

## *8. தாவும் மனது*

*இரதி வேணுவை நோண்டுவது போலப் பார்த்தாள். தன்னைவிட இரண்டு வயது குறைந்தவன் என்பது அவளுக்குத் தெரியும். சுரேனைவிட நிச்சயம் மூன்று அல்லது நான்கு வயது மூத்தவனாய் இருப்பான். அவனைப் பார்த்து யாரும் அழகன் என்று சொல்லமாட்டார்கள். அவன் எதிர்பார்க்கும் பெண்ணும் அப்படித்தானே இருக்க வேண்டும்? அதற்குத் தான் பொருத்தம் என்பதாய் அவளுக்குத் தோன்றியது. இராமிற்கு உள்ளது போன்று இவனுக்கும் சபலம் உண்டா? அப்படி உண்டென்றால் இவனை எனது கைக்குள் போட்டுக் கொள்வதில் என்ன தப்பு? சுரேனைப் போல இவனையும் கோட்டைவிடாமல் திருமணம் செய்து கொண்டால் எனக்கு நல்ல வாழ்வு கிடைக்கும் அல்லவா? இவனைச் சபலப்பட வைக்க வேண்டும். இவனோடு அன்பாய்ப் பழகவேண்டும். பெண்ணின் அண்மை தேவைப்படாத ஆண்கள் மிகவும் சொற்பம். இவன் அந்தச் சொற்பத்தில் ஒருத்தன் அல்ல. இவனைக் கைக்குள் போடுவது பல நன்மைகளை உண்டுபண்ணும். முதலில் சுரேனுக்குக் கைநழுவிப் போய்விடுமோ என்கின்ற அக்கறை ஏற்படும். அல்லது கடத்திக் கொண்டு இருக்காது கைகழுவிவிடுவான். மச்சாளைப் பற்றிய அவனது மனக்கிடக்கை வெளியாகும். எனப் பலவாறு எண்ணியவண்ணம் எப்படி இவனோடு கதைப்பது என்பதைப் பற்றி இரதி யோசித்துவிட்டு அவனோடு கதைக்கத் தொடங்கினாள். அவனது சபலத்தை ஆழம் பார்க்கவேண்டும் என்று மனதிற்குள் எண்ணிக்கொண்டாள்.*

*'எட்டு மணி போல நானும், சுரேனும் விக்கியோட ஒரு வீட்ட சில வேளை போகவேண்டி வரும். சோ நான் உடுப்பு மாத்தப் போறன்.' என்றாள் இரதி.*
*'அப்ப சரி... நான் வாறன்.' என்ற வண்ணம் வேணு எழுந்தான்.*
*'வேணு அதுக்காக நீ வெளியால போகோணும் எண்டில்லை. நீங்க இங்கயே இருங்க.' என்றாள் இரதி.*
*'அப்ப எப்படி நீங்கள் உடுப்பு மாத்துவீங்க?'*
*'அதைப் பற்றிக் கவலைப்படாதேங்க. நான் வாத்துறுமுக்க மாத்துவன். நீங்க வெட்கப்படாமல் இருங்க. இப்ப ஆறுமணிதானே? எட்டுமணிவரையும் நாங்கள் கதைச்சுக் கொண்டு இருக்கலாம். உங்களுக்கு நேரமிருக்கா?' என்றாள் இரதி.*
*'ம்... நான் வெட்கப்படுகிறன் எண்டுறியள். பருவாய் இல்லை. வீட்டில எனக்குப் பிள்ளையா குட்டியா? எவ்வளவு நேரமும் உங்களோட இருந்து கதைக்கலாம். ஒரு பிரச்சனையும் இல்லை.' என்றான் வேணு.*

தனது உடுப்புகளை எடுத்துக்கொண்டு அவனுக்கு முன்பு இருந்த குளியல் அறைக்கு உடுப்பு மாற்றச் சென்றாள் இரதி. வேணு இருக்கும் இடத்தில் இருந்து பார்த்த போது மூடப்படாத அறையின் கதவு வழியே அவள் ஆடை மாற்றுவது அரைகுறையாகத் தெரிந்தது. அதன் கதவை அவள் சிறிய இடைவெளி விட்டுச் சாத்தியிருந்தாள். வேணுவுக்கு அவள் ஆடை மாற்றுவதைப் பார்த்தால் என்ன என்கின்ற சபலம் திடீரென உண்டாகியது. அவளைப் பார்ப்பது தெரிந்தால் அவள் கோபித்துக் கொள்வாள் என்பது இவன் எண்ணமாகியது. அப்படியென்றால் தன்னிடம் சொல்லிவிட்டு எந்த எச்சரிக்கையும் இல்லாமல், கதவைப் பூட்டாது உடுப்பு மாற்றுவதின் நோக்கம் என்ன என்கின்ற கேள்வி அவனிடம் எழுந்தது. பின்பு தான் காமத்தில் கண் இழப்பது அநாகரிகம் என்று பேசாது இருந்தான். சுரேனின் காதலியான இரதியைத் தான் குழப்பக்கூடாது என்றும் எண்ணினான். அத்தோடு தன்மேல் இருக்கும் நல்ல அவிப்பிராயத்தினாலேயே இப்படித் திறந்திருக்கவே உடுப்பு மாற்றுகிறாள் என்றும் எண்ணிக் கொண்டான்.

இரதி நினைத்தது எதுவும் நடக்கவில்லை. மடையன் தன் எண்ணத்தைச் சற்றும் புரிந்து கொள்ளவில்லையே என்கின்ற சலிப்பு அவளுக்கு உண்டானது. இப்படி ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தும் குழியல் அறைக்குள் நுழைந்து ஆண்மகன் போல் தன்னைக் கட்டிப்பிடித்து ஆலிங்கனம் செய்யாவிட்டாலும் பருவாயில்லை அசைந்தாவது தன்னைப் பார்க்க முயற்சிக்கலாம் அல்லவா? என்கின்ற எரிச்சல் அவளுக்கு உண்டானது. அவன் அப்படிச் செய்தது அவன்மேல் கோபத்தையும், அபரிவிதமான ஆசையையும் உண்டுபண்ணியது. வேணுவோடு இப்போதே சுகம் கொள்ள வேண்டும் என்கின்ற மிருக வெறி அவள் உடலை திடீரெனக் கொதிக்க வைத்தது. ஏன் இவனால் இதைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்கின்ற கோபம் வந்தது.

அறைக்குள் இருக்கும் சீப்பை எடுத்துவரக் கூறி, சீப்போடு அவன் வரும்போது அவனை அப்படியே இழுத்து அணைத்துக் கொள்வோமா? என்று ஒரு கணம் அவள் எண்ணினாள். பின்பு, பெண்ணாயிருந்தும் தானே வலியத் தப்புப் பண்ணுவது அழகில்லை என்கின்ற முள்ளந்தண்டில் ஏறியிருந்த சமுகப் பண்பாட்டு உணர்வுகளால் அந்த எண்ணத்தைக் கைவிட்டாள். அவனைப் பார்க்கும் போதெல்லாம் கட்டி அணைக்க வேண்டும் என்கின்ற ஆறாக்காமம் அவளிடம் எழுந்தது.
இரதி தனது கண்களை மூடியபடி சில நிமிடங்கள் தியானத்தில் நின்றாள். தானாய் அவனை அணைப்பதும் அணைக்க எண்ணுவதும் பெண் என்கின்ற வரம்பை மீறுவதோடு, இழுத்த இழுப்பிற்கெல்லாம் போபவள் என்கின்ற எண்ணத்தை மற்றவர்கள் மனதில் உண்டு பண்ணிவிடும் என்பது அவளுக்குப் புரிந்தது. மனம் அலை பாயும்போது அதை அதன்பாட்டிற்கு விடாமல் கடிவாளம் போட்டுக் கொள்வதுதான் பெண்ணிற்கோ, ஆணிற்கோ மரியாதை தரும் என்று அவள் எண்ணினாள். பின்பு அமைதியாக உடுப்பை மாற்றிவிட்டு பதுமையாக வெளியே வந்தாள். எப்போதாவது வேணு தானாகவே தன்;மீது கைவைத்தால் மட்டும் அவள் மறுப்பதில்லை என்று அப்போது முடிவெடுத்தாள்.

சிறிது நேரம் கதைத்துக் கொண்டு இருந்துவிட்டு வேணு மரியாதையாகவே புறப்பட்டான். இவளும் புறப்பட்டுச் சுரேன் வீட்டிற்குச் சென்றாள். திரும்பி வரும் போது பதினொருமணி இருக்கும். வழக்கம் போல் இவள் அறைக் கதவைப் பூட்டவில்லை. அவர்கள் இருந்த இடத்தில் அதற்கு அவசியம் இருக்கவில்லை. அந்த அளவிற்குக் களவு கற்றறியாத மாந்தர்களின் நகரமது. என்றாலும் உள்ளே அவளுக்கு எதிர்பாராத ஒரு அதிர்ச்சி காத்திருந்தது.

இரதி உள்ளே சென்ற போது இராம் இவளைப் பார்த்து வழிந்தான். இவளுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. வேணுவோடு கூடவேண்டும் என்று எண்ணும் மனது இராமைக் கண்டாலே அவனை வெறுத்து ஒதுக்கியது. இயற்கையின் வலிமை விளங்கியது. அதற்கு அவன் குடும்பஸ்தன் என்கின்ற ஆழ்மனதின் எச்சரிப்புக் காரணமாக இருக்கலாம். அல்லது அழகும் இளமையும் குறைந்தவனாய் இருப்பது காரணமாய் இருக்கலாம். அந்த வெறுப்பை மூஞ்சையில் அடித்தது போன்று தெரிவிக்க அவளுக்கு மனது வரவில்லை.

'என்ன இந்த நேரத்தில நீங்க இங்கே இருக்கிறீங்கள்?' என்று வியப்பாகக் கேட்டாள்.
'வீட்டில எப்பவும் நரகம். பொழுது போகேல்ல... அதுதான் சும்மா இப்படி வந்தன்.' என்றான் அவன்.
'உங்களுக்குப் பொழுது போகேல்லயா? என்ன கதையிது? அப்ப ஆருக்குப் பொழுது போகும்?' என்றாள் இரதி.
'மற்றைய மனிசரோட இருக்கிறது வேறை. மற்றைய மனுசரோட கலக்கிறது வேற. ஒரு சில மனிசரோடைதான் கலக்க முடியும். அதுவும் ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் நட்பாகி அதுக்கு மேலையும் கலந்தாச் சொர்க்கம்தான்.' என்று தத்துவம் பேசினான்.
அவனின் இந்தப் பதில் இரதிக்குப் பெரும் எரிச்சலை உண்டு பண்ணியது.
'பறக்கிறதை விட்டிட்டு இருக்கிறதோட கலக்கிறதுதானே? உங்களுக்கு எப்பிடியோ... எனக்கு ஏற்கனவே நல்ல ஆண் நட்பு இருக்குது. ஐ மீன் சுரேன்.'
'எனக்குத்தெரியும். அதுக்காக என்ர நட்பே வேண்டாம் எண்டுறியளோ?' என்றான் அவன்.
அவளுக்குச் சினமாய் இருந்தது. இந்தக் கதைக்கு முடிவு வருவது போல்த் தெரியவில்லை. இரதி அலுப்பில், வெறுப்பில் கொட்டாவி விட்டாள். இருந்தும் இராம் எழுந்த போவதாய்த் தெரியவில்லை.
'எனக்கு அலுப்பா இருக்குது. நித்திரை வருகுது இராம் அண்ணை.' என்றாள்.
'ஓ... பிரச்சனையில்லை நான் இப்ப போறன். நாளைக்கு வந்து வடிவாக் கதைக்கிறன்.' என்று கூறிவிட்டு இராம் சென்றான். அலையிறான் என்று மனதிற்குள் திட்டிய வண்ணமே கதவை பூட்டிவிட்டு படுக்கைக்குள் அடைக்கலமாகினாள் இரதி.

★

அன்று சனிக்கிழமை. கோடையென்னும் வசந்தம் கொழுத்த சூரியனை வடக்கே அழைத்து வந்திருந்தது. இனி நாள் பூராகவும் அவன் பிரசன்னம்தான். தொப்பி, கிளவுஸ், கழுத்துத் துணி, மொத்தமான ஜக்கெற் போன்றவற்றில் இருந்து தற்காலிக விடுதலை. கோடைக்காலம் குளிர் நாடுகளில் வரமாகப் போற்றப்படுவது. ஆதவனின் வரவால் மெல்லிய உடையணிந்த மனிதர்களின் குதுகலிப்பு.
நவீன சந்தையில் தனக்குத் தேவையான பொருட்களை வாங்கிக்கொண்டு வெளியே வரும் போதுதான் இராம் இவர்களைக் கண்டு வணக்கம் கூறினான். இராமையும் கூட்டிக்கொண்டு சுரேன் இருக்கும் இடத்திற்கு எல்லோரும் போவோம் என்று சுரேன் கூறினான். அதை யாரும் மறுக்கவில்லை. இரதிக்கு சுரேன் ஏமாற்றியதான உணர்வு. இரண்டு ஐஸ்கிறீம் வாங்கியிருக்க வேண்டும். தனக்கு மட்டும் ஒன்று வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டு வந்தான். என்ன செய்யலாம் என்று யோசித்தவளுக்கு ஒரு குறுக்கு எண்ணம் வந்தது.

சுரேனின் எச்சில் ஒன்றும் அவளுக்குப் புதிதல்ல. அதே நேரம் இந்த இராமிற்கு இது ஒரு படிப்பினையாய் இருக்கட்டும் என்று எண்ணினாள். தனக்கும் சுரேனுக்கும்

உள்ள உறவு  சாதாரணமானது இல்லை என்பது புரியட்டும் என்று அவள் காட்ட விரும்பினாள். அந்த உறவின் நலிவு அவளுக்கு மட்டுமே தெரிந்த இரகசியம். திடீரெனச் சுரேனின் ஐஸ்கிறீமைப் பறித்து இரதி சாப்பிடத் தொடங்கினாள். சுரேன் மீதி பறிபோன ஏமாற்றத்தில் வடையைத் தவறவிட்ட காகம் போலப் பார்த்தான். அதைப் பார்த்த இராமின் முகம் கறுத்துச் சுண்டிப் போய்விட்டது. பின்பு மற்றவர்கள் பார்க்காது தன்னைச் சமாளித்துக் கொண்டு எதுவும் நடவாது போல் அவர்களோடு வந்தான். ராமின் முக மாற்றங்களை இரதி கவனித்து  இரசித்தாள். இரதிக்கு இராம் மாத்திரம் தொல்லை கொடுக்கவில்லை. இன்னம் சில  திருமணம் செய்து கொண்டவர்களும் விசில் அடிப்பதுண்டு. அவள் இதை ஒரு  பொருட்டாயே கண்டு கொள்வதில்லை. இது பொதுவாய் ஆண்களுக்கு உள்ள  சபலம் என்று எண்ணிய வண்ணம் பொருட்படுத்தாமல் விட்டுவிடுவாள். ஆனால் இராம் அதிகமாகவே தொல்லைப்படுத்துவதாக உணர்ந்தாள்.

இரதி சுரேனிடனிம் இதைச் சாடை மாடையாய்க் கூறிய போது பட்டென்று முகத்தில் அடிப்பது போல் எதையாவது சொல்லிவிடு என்கிறான். மச்சாள் வந்தாலும் தன்னோடான உறவை முடித்துக் கொள்ளும் எண்ணம் இருப்பதாய் இரதிக்குத் தோன்றவில்லை. இரதிக்கு எப்படித் தடுப்பது என்றும் புரியவில்லை. அவள் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தாள்.

அன்று சுரேன் அவளோடு பேய் போல உறவு கொண்டான். அவன் குடித்த பியர் உடம்பெல்லாம் வியர்வையாக வழிந்தது. இரதிக்கு வியர்வை நாற்றம் பிடிக்கவில்லை. இப்படியே கிடந்தால் எலிகள் போல் இது தொடர் கதையாகும் என்பது அவளுக்குப் புரிந்தது. இங்கே குளித்துவிட்டு வீட்டிற்குப் போகலாம் என்றால் குளித்துவிட்டு வரவும் படுக்கைக்கு இழுப்பான் என்பது இரதிக்குத் தெரியும். அவள் சுரேனைப் பார்த்தாள். கடுமையான ஆட்டத்தின் காரணமாய் களைத்துத் தூங்கினான். அவசரமாகத் தனது ஐPன்ஸ், மேற்சட்டை என்பவற்றை அணிந்து கொண்டு தனது வீட்டிற்குச் சென்றாள்.

★

பனி கரைந்து கண்ணாடி பதித்ததாய் தெருவெல்லாம் பளிங்கு போன்று காட்சி அழித்தது. அதில் நடக்கும் போது எப்போதும் காலை வாரிவிடலாம் என்கின்ற பயம். இரதி மிகவும் அவதானமாய் ஒவ்வோர் அடியாய் எடுத்து வைத்து  வீட்டிற்குச் சென்றாள். வீட்டிற்குச் சென்றவுடனேயே தனது உடைகளைக் களைந்துவிட்டு வெது வெதுப்பான வெந்நீரின்; கீழ் அதிக நேரம் நின்றாள். இப்படி வெதுவெதுப்பான வெந்நீரிலே உடம்பு அலுத்திருக்கும் போது நீராடுவது அபார இன்பத்தை இரதிக்கு உண்டாக்கும். அதை அவள் நிதானமாய் இரசித்து அனுபவித்தாள்.

இப்போதும் அதைவிட்டு அவளுக்கு வெளியே வருவதற்கு மனதே இல்லை. கடும் பிரயத்தனப்பட்டு வெளியே வந்தாள். தலையைத் துவட்டி நையிட்டியை அணிந்துகொண்டு வரும் போது சுரேனின் எண்ணம் வந்தது. இப்படிக் குளித்து வெளியே வரும்போது அவன் கண்ணில்பட்டால் அவ்வளவுதான். வெறி வந்தவன் போல அள்ளி அணைத்து நுகராமல் விடமாட்டான். குளித்ததிற்கு இதமாய்  தேநீர் குடிக்க எண்ணியவள் அதைச் செயற்படுத்தித் தேநீரோடு வந்து சோபாவில் உட்கார்ந்தாள். அப்போதுதான் இரதி அந்த மேசையை அவதானித்தாள். அது என்ன? கிட்ட இருந்ததால் தெளிவாயே தெரிந்தது. ஒரு சொக்ளேற் இருந்தது. அதற்குக் கீழ் ஒரு கடதாசி மடித்து வைக்கப்பட்டிருந்தது. இது யார் வேலையாய் இருக்கும்? எதற்கு இந்தச் சொக்ளேற்? யாருக்காவது பிறந்த நாளா? வீட்டுக்கார

அம்மாவிற்குப் பிறந்த நாளாய் இருக்குமோ? அப்படி என்றால் நேற்று உடுப்புகளைக் கொண்டு வந்து தரும் போது சொல்லியிருப்பார்களே? என்று பலவாறு குழம்பிய வண்ணம் சொக்ளேற்றை எடுத்தாள்.

அதை எடுத்த வேகத்தில் கடதாசி மடிப்பு கீழே விழுந்தது. அப்போதுதான் அதை இரதி கவனித்தாள். ஏதோ எழுதி நான்காய் மடிக்கப்பட்ட காகிதம் அது. கீழே குனிந்து அதை எடுத்துப் பிரித்தாள். கடிதம். தமிழில் வேறு யாருக்கு? அவள் வாசிக்கத்தொடங்கினாள்.

அன்புள்ள இரதிக்கு!

உன்னிடம் என் மனதை முழுமையாகத் திறந்து காட்ட வேண்டும் என்று ஆசைப்பட்டேன். ஆனால் அது எப்படியென்று தெரியாது முழித்தேன். பின்பு இப்படியும் ஒரு வழியுண்டு என்பதை அறிந்து அமைதியடைந்து, அதை நடைமுறைப் படுத்துகிறேன்.

உன்னிடம் என் மனதின் உண்மையை உண்மையாகவே கூறுவதென்றால் என்னிடம் என் இதயம் இப்போது இல்லை என்பதே சர்வ சத்தியம். அதை உன்னிடம் நான் பறிகொடுத்து நீண்ட காலமாகிவிட்டது. உன்னோடு என்றும் சேர்ந்து வாழவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இந்த விருப்பத்திற்கு எது தடையாய் இருந்தாலும் நான் அதை நிச்சயம் வெற்றிகொள்வேன்.

நீ சுரேனுடன் தொடர்பு வைத்திருப்பது எனக்குத் தெரியும். ஆனால் அவன் உன்னைவிட வயதில் சிறியவன். எனவே உன்னை நிரந்தரமாய் வைத்திருக்கமாட்டான். ஆனால் நான் அப்படி அல்ல. உனக்காகவே என்றும் வாழ்வேன். எனவே என்னைப் புரிந்துகொண்டு எனக்காக நாளையிரவு காத்திருக்கவும்.

இப்படிக்கு,
இராம்.

இரதிக்கு மேனி அனலாய்ப் பற்றி எரிவதான வேதனை. 'என்னை எண்ணாதே என்று வெளிப்படையாகவே கூறிய பின்பும் இவனுக்கு இவ்வளவு சபலம்? என்ன செய்வது இவனை? எப்படி இவன் எண்ணத்தை மாற்றுவது? பிடிக்கவில்லை என்பதைப் புரிந்த பின்னும் அதைச்சாட்டி இதைச் சாட்டி சுரேன் மேல் பழி சொல்லி... என்ன மனிதன் இவன்? அவன் சுரேன் மீது பழி சொல்லும் போது நான் அவனைப் பற்றி என்ன நினைப்பேன் என்று புரியவில்லையா? ஆசை அவனது அறிவை மறைத்துவிட்டதா?' என்று எண்ணி இரதி கோபமானாள். இங்கே வன்முறையை மட்டும் எக்கட்டத்திலும் அவனால் பாவிக்கமுடியாது என்பது இரதிக்குத் தெரியும். அப்படி நடந்தால் எந்தத் தயவு தாட்சண்யமும் இன்றிச் சிறை செல்லவேண்டி வரும் என்பதும் அவளுக்குத் தெரியும். 'இனி அவன் நேரே கேட்பான். அப்போது முகத்தில் அடித்தாற் போன்று பதில் சொல்லிக் கலைக்க வேண்டும்.' என்று இரதி எண்ணினாள். 'நாளை வரட்டும்... முகத்தில் அடிப்பது போன்று அவனுக்குப் பதில் கூறுகிறேன்.' என்று எண்ணிக்கொண்டு படுக்கச் சென்றாள்.

அடுத்த நாள் இரவு பத்துமணியாகியும் இராம் வரவில்லை. பயத்தால் வரவில்லையோ? என்று இரதி எண்ணினாள். அவளது கண்கள் 'உனது எல்லையை நீயே வகுத்துக்கொள்.' என்கின்ற வசனத்தின் மீது நிலைத்தன. 'உண்மைதான். நான்

ஏற்கனவே இராமிடம் கடுமையாகப் பழகியிருந்தால் இப்படி அவன் இடம் கண்டிருக்கமாட்டான். நான் ஆரம்பத்தில் விட்ட தவறுதான் அவனிற்கு இவ்வளவு துணிச்சலைக் கொடுத்து விட்டது. சரி எதற்கும் இன்று வரட்டும் ஒரு முடிவு கண்டுவிடலாம்.' என்று எண்ணிக் கொண்டாள். பதினைந்து நிமிடங்கள் போயிருக்கும். யாரோ படியால் இறங்கி வரும் சத்தம் கேட்டது. அவன்தான் இறங்கி வந்தான். அப்படி வந்தவனின் நடையில் சிறிது தள்ளாட்டத்தை இரதி கவனித்தாள். அவனில் மது நாற்றம் அடித்தது. இதை இரதி எதிர்பார்க்கவில்லை. எப்படியும் சமாளித்தே ஆகவேண்டுமென்று எண்ணிக் கொண்டாள்.

'என்ன எனக்காக கன்நேரம் வெயிற் பண்ணுறியே?' என்று கேட்டுக் கொண்டு அவள் அருகே வந்தான். அவனைப் பார்த்து கோபத்தோடு முறைத்தாள் இரதி. அதைப் பொருட்படுத்தாது,
'நீ நல்ல வடிவா இருக்கா இரதிக் குட்டி.' என்று கூறிய வண்ணமே தள்ளாடித் தள்ளாடி இரதியை நெருங்கினான். அவன் அருகே வந்ததும் இரதிக்கு வயிற்றைக் குமட்டுவது போன்று மது நாற்றம் அடித்தது. சுவரோரமாய் நின்ற இரதியால் விலக முடியாதபடி இராம் முன்னே வந்து நின்று கொண்டான். பொறுக்க முடியாதவளாய்,
'இது என்ன வேலை இராம்?' என்று கத்தினாள்.
'இதோ? இது உனக்குத் தெரியாத வேலையா?' என்று கூறிய வண்ணம் அவன் இரதியின் கையைப் பிடித்தான்.

இரதிக்கு அதீத கோபம் வந்தது. கையை மடக்கித் தனது பலத்தை எல்லாம் குவித்து மூஞ்சையில் ஒரு குத்து விட்டாள். இராமுவின் போதை காலால் இறங்கி கதவாற் பாய்ந்தது. அவன் ஒரு நிலைக்கு வந்தான். தான் செய்ததைப் புரிந்து கொண்டான். இவர்கள் இப்படி நிற்கும் போது வீட்டுக்கார அம்மா துவைத்துக் காயவைத்த படுக்கை உறைகளுடன் உள்ளே வந்தாள். இரதி சமாளித்துக் கொண்டு அதை வாங்கி உள்ளே வைக்கவும் குட்நையிட் கூறிவிட்டு அந்த அம்மா சென்றுவிட்டாள். இராம் திகைப்பில் இருந்து விடுபட்டு எச்சிலைக் கூட்டி விழுங்கிவிட்டு, எதுவும் பேசாது விருட்டென்று வெளியேறிச் சென்றுவிட்டான்.

'மிருகத்துக்கு உள்ளது போன்றே மனிதனுக்கும் உணர்ச்சிகள் இருக்கிறன. சில சமயங்களில் உணர்ச்சியைக் கட்டுப்படுத்தி மனிதன் மிருகங்களைவிட உயர்ந்து தனித்துவமாகி விடுகிறான். எல்லா மனிதனும் எல்லாச் சந்தர்ப்பத்திலும் அப்படிச் செய்து விடுவதில்லை. அடிபட்ட பாம்பு சீறுவது உண்டு. அதுவே வன்மமாய் பழிவாங்கத் துணிந்து விட்டால் ஆபத்தானது. ஆபத்தான இந்தப் பழக்கம் விலங்குகளைவிட மனிதனுக்கு மிகவும் அதிகமாகவே உள்ளது. ஏனென்ற கேள்வி எழலாம். ஒற்றை விடைதான் உலகத்தில் கிடைப்பதில்லை. ஐரோப்பிய மக்களுக்கு எமது மக்களுக்கும் மன வளர்ச்சியில் வேறுபாடு இருப்பதாகத் தோன்றும். இரு நண்பர்களுக்கு இடையில் சண்டை மூண்டால் ஐரோப்பிய நண்பர்களாய் இருந்தால் பெரும்பான்மையாக வாய்ச் சண்டை முற்றும். அது உச்ச நிலைக்குச் செல்லும் போது அங்கே உள்ள பாத்திரத்தையோ அல்லது கதவையோ உதைந்துவிட்டு ஒரு நண்பர் சென்றுவிடுவார். எக்காரணம் கொண்டும் பொதுவாகக் கை நீட்டமாட்டார்கள். அடுத்த நாள் மீண்டும் அவர்கள் சந்திக்கும் போது நிச்சயம் பலர் மூஞ்சையை நீட்டமாட்டார்கள். தங்களுக்குள் எதுவுமே நடவாது போன்று சிரித்துப் பேசுவார்கள். வன்மம் பகை எதுவும் தொடர்கதையாகாது. இதற்குப் புறநடையாக இருப்பவர்கள் இல்லையெனக் கூறுவது மடமை.

கருத்து வேற்றுமைகள்கூட அந்தக் கருத்தைப் பற்றிக் கதைக்கும் நேரம் மட்டுமே வசனங்களாக நீடிக்கும். மேற்கொண்டு அவர்களுக்குள் அதைத் தவிர எந்த வேற்றுமையும் இருக்க முடியாது. எவ்வளவு அருமையான பண்பு? இதே நிகழ்வு

எம்மவர்களுக்கிடையில் நடந்தால் கதை முற்றி கருத்தைவிட்டுச் சினத்தைக் கடைப்பிடிப்பார்கள். அதனால் பொதுவாகக் கைகலப்பு உண்டாவதும் உண்டு. உண்டானால் கட்டிப்புரள்வார்கள். காலகாலத்திற்குமான பகை அங்கே கருவாகும். அது பரம்பரைகள் கடந்து செல்லும். அந்தப் பகை முறித்து இவர்கள் இனி எப்போது இணைவார்கள் என்பதை எவராலும் கூறமுடியாது. அதில் சிலர் பகையைச் சிரசுமேல் வைத்து எப்போது பகைவனைப் பழிவாங்கலாம் என்று காலம் பார்த்துக் கொண்டு திரிவார்கள். இது எவ்வளவு கேவலமான பழக்கம்?' என்று எண்ணிய இரதியே தான் அதனால் இன்று பாதிக்கப்பட்டுப் போய் இருப்பதை உணர்ந்தாள். இரதியின் கையால் அடிவாங்கிய இராம் சும்மாய் இருந்து விடவில்லை. தனது மற்றைய நண்பர்களிடம் சென்று இல்லாதது பொல்லாதது எல்லாவற்றையும் அள்ளி வைத்தான்.

ஒரு சிலர் ராமின் கதையை அப்பிடியே நம்பினார்கள். மற்றும் சிலர் நம்புவதா விடுவதா என்று தெண்டாடினர். வேணுவும் அப்படியான தெண்டாட்டத்திலேயே இருந்தான். இருந்தும் வேணுவுக்கு மனம் பொறுக்கவில்லை. இதை எப்படியாவது இரதியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். இரதியை நம்புகின்ற அளவிற்கு வேணுவுக்கு இராமில் நம்பிக்கை கிடையாது. எனவே இரதியிடம் கேட்டு உண்மையைத் தெரிந்து கொள்ளலாமென முடிவு செய்து கொண்டான்.

இரவு எட்டுமணி போல் வேணு வெளிக்கிட்டு இரதியின் வீட்டிற்குப் போவதற்காய் வீதியில் இறங்கி நடந்தான்.

சூரிய வெளிச்சம் இரவும் பகலும் எனக்கு ஒன்றே என்றது. இங்கே இப்போது சூரியன் மறையப் பத்துமணி ஆகும். நாள் பூராகவும் அவன் நடப்பு காட்டும் நாட்களும் உண்டு. அது ஆரம்பத்தில் அதிசயமாய் இருந்தது. இப்போது பழகிப்போய்விட்டது.

'நாட்டின் பிரச்சனை எல்லோரது தலைவிதியையும் எப்படி மாற்றிவிட்டது? அன்னியத்தில் புதுமையா? அல்லது புதுமையான அன்னியமா?' அவனுக்கு அது புரியவில்லை. ஆனால் அவனால் அதை இரசிக்கக் கூடியதாகவே இருந்தது. இங்கே பொன்னிற அழகிகளுக்குப் பஞ்சமில்லை. அவர்களின் அழகை இரசிப்பதும் ஆனந்தமே. வேணுவின் கண்களும் தெருவில் போய்க் கொண்டிருந்த அழகிகளை இரசிக்கத் தவறவில்லை. அழகை இரசிப்பது தப்பில்லை என்று அவன் எண்ணிக் கொண்டான்.

எண்ணங்களில் முள்கியவனுக்கு எப்படி இரதி வீட்டிற்கு வந்தேன் என்பதே வியப்பாய் இருந்தது. மனம் ஒன்றில் லயித்துவிட்டால் நேரம் எவ்வளவு சுலபமாய்ச் சென்று விடுகின்றது என்று எண்ணிய படியே இரதியின் வீட்டுக் கதவைத் தட்டினான். கதவு பழைய கதவாக இல்லை. இரதி நையிட்டியுடன் வந்து கதவைத் திறந்தாள். அவள் முகத்தில் புன்னகை. அவனை அங்கே பார்ப்பதில் ஆர்வம்.

'உள்ள வா வேணு?' என்றாள்.
'தாங்ஸ்.' என்ற வண்ணமே உள்ளே சென்று சோபாவில் அமர்ந்த வண்ணம்,
'படிச்சுக் கொண்டு இருந்தியள் போல இருக்குது?' என்று கேட்டான்.
'இல்ல வேணு. வீட்டில இருந்து கடிதம் வந்தது. பதில் எழுதிக் கொண்டு இருந்தன்.' என்றாள் இரதி.
'எல்லா இடமும் ஒரே பிரச்சனைதான்.' என்றான் வேணு.

*'ம்... அங்க ஆமித் தொல்லை... இங்க...' கூறத் தொடங்கியவள் கூறாது நாக்கைக் கடித்துக் கொண்டாள்.*
*'இங்க என்ன? ஏன் எனக்கு மறைக்கிறீங்க? தயவு செய்து சொல்லுங்க. இல்லாட்டி எனக்குத் தலை வெடிச்சிடும்.' என்று வேணு நெருக்கினான்.*
*'ஒண்டுமில்லை வேணு...' என்று இரதி மழுப்ப முயன்றாள்.*
*'இல்லையெண்டா ஏதோ இருக்கெண்டுதான் அர்த்தம். சொல்லுவியளெண்டா நான் இருக்கிறன். இல்லாட்டி எனக்கென்ன வேலை இங்க? நான் போட்டு வாறன்.' அவன் செட்டுக் காட்டிய வண்ணம் எழுந்து கொண்டான்.*
*'பெரிய நடப்புத்தான் உமக்கு. அவசரப்படாதையும் வேணு. நான் சொல்லுறன்.' என்று கூறிவிட்டு இரதி அவனுக்குக் கோப்பி தயாரிக்கத் தொடங்கினாள். கோப்பி தயாரித்த வண்ணமே,*
*'இராமப் பற்றி என்ன நினைக்கிற வேணு?' என்றாள் இரதி. இவர்களுக்குள் ஏதோ பிரச்சனை நடந்திருக்க வேண்டும். அதுதான் இரதி அவனைக் குற்றஞ் சாட்டத் தொடங்குகிறாள். ம்... இராம் என்ன செய்திருப்பான்? தனது சபலப் புத்தியை இவளிடத்திலும் அலைபாய விட்டிருப்பானோ? என்பதாக யோசனையில் முள்கியவனை இரதி உலுப்பினாள்.*
*'நான் கேட்கிறதுக்குப் பதில் சொல்லாமல் அப்படி என்ன கப்பல் மூழ்கின கவலை?'*
*'ஒண்டுமில்லை. நான் அவனைப் பற்றி என்ன நினைக்கிறது?'*
*'யார் யார் எப்படி நடப்பாங்கள் எண்டு சொல்ல முடியாது வேணு.'*
*'உஸ்... என்ன நடந்தது சொல்லுங்க.'*
*'ம்... வந்த நாள் தொடக்கமே இராமின்ர பார்வையும் கதையும் சரியில்ல. ஆனாலூ நான் பொறுத்துப் பொறுத்து இருந்தனான். ஒரு கலியாணம் கட்டாத பெடியனா இருந்து சேட்டை விட்டா அது வேற. இவருக்கு மனிசி, பிள்ளை எல்லாம் இங்க இருக்குது. இவ்வளவும் இருந்தே விஷமத்தனமாய் என்னைப் பார்த்துக் கதை சொல்வார். நான் அதையெல்லாம் பொறுத்துக் கொண்டு வந்தனான். இருக்கிறது கொஞ்சத் தமிழர்... அதுக்குள்ளேயே அடிபடுகிறது மரியாதை இல்லை எண்டு நினைச்சனான். ஆனா அவற்றை சேட்டை அளவுக்கு மீறிப் போச்சுது. வியாழன் இரவு கூனிப் பிடிச்சுக் கொண்டு வீட்ட வந்தவர். குடிச்சிருந்தார் வேணு. அப்பிடி நாத்தம். வந்தவரை வெளிய போவெண்டு சொல்லுறது மரியாதை இல்லைத்தானே? உள்ள விட்டிட்டன். அதைப் பயன்படுத்தி அவர் என்ர கையைப் பிடிச்சிட்டார்.'*

*அவள் உணர்ச்சி வசப்பட்டு அழுகை வயப்பட்டாள். குரல் தளதளக்க கதைப்பதை நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் அப்பிடியே நின்றாள். பின்பு கண்ணைத் துடைத்துவிட்டு,*

*'நான் இதுக்கு விட்டுக் கொடுத்தனெண்டா நிறையப் பிரச்சனை வரும். இராமின்ர மனிசி, சுரேன்லூ இரண்டு பேருமே உருக்குலைஞ்சு போயிடுவினம். சுரேனுக்குப் பருவாய் இல்லை. என்னைவிட வயசு குறைஞ்ச மச்சாள் அடிக்கடி கடிதம் போடுறாள். ஆனாலூ ஐஞ்சு பிள்ளயளோடு இருக்கிற இராமின்ர மனிசி பாவம். அதுதான் ஆம்பிள்ளையெண்டு பாக்காமல் கைநீட்டவேண்டி வந்திச்சு.' என்று கூறி முடித்துவிட்டு நிம்மதியாக மூச்சுவிட்டாள் இரதி.*

*கலந்த கோப்பியை வேணுவிற்குக் கொடுத்தாள். தானும் ஒரு குவளை கோப்பியைக் கையில் எடுத்துக் கொண்டாள். வேணுவின் பக்கத்தில் வந்து அமர்ந்தவள், 'நான் செய்தது பிழையா?' என்று கேட்ட வண்ணம் கரும்பின் நாயகன் நடனமாடும் கருவிழிகளால் வேணுவைப் பார்த்து ஓர் வெட்டு வெட்டினாள். வேணுவிற்கு ஒருவித இயற்கையின் மயக்கம். ஏதோ வார்த்தைகள் வந்தன.*

*'நான் உங்கட இடத்தில இருந்திருந்தாலும் இதைத்தான் செய்திருப்பன்.' என்றான்.*

*'தாங்ஸ் வேணு தாங்ஸ்.' அவள் கண்கள் திரையிட்டுக் கொண்டன. பெண் கவலைப்பட்டால் ஆண் காதலாகிவிடுகிறான். வேணுவிற்கு அப்படியே அவளைக் கட்டி அணைத்து மார்பில் சாய்த்து ஆறுதல் கூறவேண்டும் போல் இருந்தது. அவனுக்கு இராமின் நினைவு வந்தது.*

★

*பாடசாலை முடிந்தும் இரதி, சுரேன், விக்கி, சுகன்யா ஆகிய நால்வரும் அந்தக் கிராமத்தை விட்டுப் போகவில்லை. அவர்கள் கோடைக்கால விடுமுறையின் போது வேலை செய்ய உத்தேசித்திருந்தனர். இந்த இடைவெளிக்குள் இராம் தனது தந்திரக் கதையால் தனக்குச் சார்பானதும் இரதிக்கும், சுரேனுக்கும் ஏதிரானதுமான அணி சேர்க்கும் வேலையைச் செய்திருந்தான். அதே வேளை இரதியையும் சிலர் நம்பினர். அந்த ஆண்டு விடுமுறை வந்ததும் கழிந்ததுமாகப் போயிற்று. அடுத்த ஆண்டிற்கான வகுப்புகள் தொடங்கின. விக்கியும், சுகன்யாவும் அதே இடத்தில் தங்கிக் கொண்டார்கள். இரதியும், சுரேனும் வேறு ஓர் இடத்திற்குச் சென்றனர்.*

## *9. இரங்கனும் இரதியும்*

*அந்த இடத்திற்குச் சென்ற அவர்களுக்குப் பாடசாலையில் இடம் கிடைத்தது. ஆனால் அங்கே தங்குவதற்கு வீடு கிடைக்கவில்லை. அது அவர்கள் முன்பு வசித்த இடத்தைவிடப் பெரிய நகரம். நகரத்துக்குப் பத்து கிலோமீற்றர் தள்ளி வீடு ஒன்று கிடைத்தது. அப்படித் தூரத்தில் இருப்பது குளிர் காலத்தில் சிக்கலாய் போய்விடும் என்பது உறைத்தது. அவர்கள் என்ன செய்வது என்று எண்ணிக் குழம்பிக் கொண்டிருக்கும் போதுதான் அந்த வாலிபர்கள் இவர்களைக் கண்டனர். அவர்களும் இலங்கைப் பிரச்சனையால் இங்கே ஈழம் காணப் புறப்பட்டவர்கள். அவர்கள் இவர்களது பிரச்சனையைக் கேட்டு அறிந்தனர். வீடு எடுக்கும் வரைக்கும் தங்கள் வீட்டில் தங்கலாம் என்று தாராள மனதுடன் கூறினார்கள்.*

*அது ஒரு சிறிய வீடு. அந்த மூன்று இளைஞர்களும் ஒரு சிறிய அறைக்குள் வசித்து வந்தனர். இரங்கன் கோலில் படுப்பது வழக்கம். அதைவிடச் சமையலறை, குளியலறை ஆகிய இரண்டும் இருந்தன. அதிக அளவு பணம் மிச்சம்பிடிக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் எலிப் பொந்திலும் வாசிக்கத் தயாராக இருந்தார்கள். அந்த எலிப் பொந்தும் பறிபோவது போல இரதிக்காக அறையை விட்டுக்கொடுக்க அவர்கள் விரும்பவில்லை. எதுவும் செய்ய முடியாமல் இரங்கன், இரதி, சுரேன் மூவருமே புரட்சியாகக் கோலில் படுக்க வேண்டியதாயிற்று. அத்தால்ஞ நேர்வேயில் ஆண் பெண் வித்தியாசம் பார்ப்பதில்லை என்பதை அவர்களும் தத்தெடுத்துக் கொண்டார்கள்.*

*இரண்டு மூன்று நாட்கள் அசம்பாவிதம் இல்லாமல் கடந்தாலும் இரங்கனின் பார்வையை இரதி கவனித்துக் கொண்டாள். இரங்கனின் மனதில் இருக்கும் ஆசையைத் திடமாய் அன்று காலை சாப்பிடும் போது அறிந்தும் கொண்டாள். அவர்கள் அன்று காலைச் சாப்பாட்டை சாப்பிட்டுக் கொண்டு இருந்தனர். துரதிஸ்ட்வசமாய் இரதி இரங்கனுக்குப் பக்கத்தில் அமரவேண்டியதாயிற்று. சாப்பாடு எதுவும் சமைக்கவில்லை. கோன்பிளாக்சையே பாலிற் கலந்து சாப்பிட்டுக் கொண்டு இருந்தார்கள். இரதியின் காலில் ஏதோ தட்டுப்படுவது போன்று இருந்தது. குனிந்த பார்த்த போது இரங்கனின் கால். இராமுவுக்கு நடந்தது இவருக்குத் தெரியாது என்கின்ற எண்ணம்தான் இரதிக்கு முதலில் வந்தது. இரங்கன் காலால் மெதுவாக மீண்டும் மிதித்தான். இரதி எந்த அசைவையும் ஏற்படுத்தவில்லை. இரங்கனைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டு*

சாப்பிட்டாள். இரங்கன் மேலும் மேலும் காலை உயர்த்தி கூச்சம் ஊட்டினான். உணர்ச்சி ஏற்றினான். அதைத் தாங்கிக் கொண்டு சாப்பிட்டு முடித்ததும் மேசையை விட்டு அவசரமாக எழுந்து கொண்டாள்.

பாடசாலைக்குச் சென்றவளுக்குப் படிப்பில் கவனம் செல்லவில்லை. இரங்கன் தன்னை அடைய ஆவலாய் உள்ளான் என்பது அவளுக்குப் புரிந்தது. 'என்ன செய்வது? சுரேனை நம்பி இரங்கனின் சேட்டைக்கு முடிவுகட்டுவதா? அல்லது சுரேனை வெட்டிவிட்டு இரங்கனை அணைத்துக் கொள்வதா?
சுரேன் நிச்சயமாக என்னைத் திருமணம் செய்து கொள்ளப் போவது இல்லை. என்னோடு கூடி இன்பத்தை அனுபவித்துவிட்டு மச்சாளைக் கூப்பிட்டுக் குடும்பம் நடத்துவான். ஏன் அப்படியானவனை நம்பி இருக்கவேண்டும்?' இரதி மனதிற்குள் போராடினாள். அவள் எண்ணங்கள் முடிவில்லாது நீண்டு கொண்டே சென்றன.

'சரி, அப்படித்தான் அவன் செய்தாலும் நான் எப்படி இரங்கனோடு சேருவது? அது தப்பல்லவா? சமுதாயமும் எங்களைச் சுற்றி இருப்பவர்களும் எப்படி எல்லாம் கதைப்பார்கள்? இங்கு வந்த பின்பும் சமுதாயம், ஊரென்று ஏன் பயப்படவேண்டும்? நோர்வேப் பெண்கள் வாழ்வது போல வாழ்ந்தால் என்ன? நான் யாரையும் எதிர்பார்த்து வாழவில்லையே? அப்படி இருக்கும் போது ஏன் சுரேனுக்குப் பயப்படவேண்டும்? சுரேனைவிட இரங்கனுக்கு வயதும் அதிகம். அவனால் நிச்சயம் ஒரு முடிவுக்கும் வரமுடியும். அப்படி அவன் வந்தால் திருமணம் செய்து கொள்ளலாம். அது பாதுகாப்பாயும் அமையும்.' என்பதாக அவள் மனது தொடர்ந்தும் அலசியது .

'நோர்வேப் பெண்கள் போன்று கிடைக்கும் போது ஏன் அனுபவிக்கக் கூடாது? கலாசாரம் என்பது கலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப வடிவம் எடுப்பது அல்லவா? எனது இடம் மாறிவிட்டது. பெண்ணின் சுதந்திரம் இங்கே ஆணுக்குச் சமமானது. அவளது எல்லைகள் இங்கு விஸ்தீரணமானவை. நான் வாழ்வின் தொடக்கத்தில். சுரேன், இரங்கன் நீண்ட பயணத்தில் சந்திக்கும் பாதசாரிகள்தான். இது இலங்கை இல்லை. நான் என்னை இந்நாட்டுப் பெண் போலவே எண்ண வேண்டும். வாழ வேண்டும்.' என்று அவள் எண்ணினாள்.

இரங்கனுக்கும் மனதினுள் ஆசை என்பது நெய் உண்ட ஓமத்தீயாய் உயர்ந்து எழுந்தது. இரதியைக் காணும் போது காமம் தலைக்கேறியது. சுரேன் இடையில் படுத்து வில்லனாவது ஆத்திரத்தைத் தந்தது. அவன் எப்போது சந்தர்ப்பம் கிடைக்குமென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

அன்று பிற்பகல் பாடசாலை முடிந்து வந்ததும் பெட்டிகளைப் பார ஊர்தியில் ஏற்றும் வேலைக்குச் சுரேன் போயிருந்தான். அந்த வேலை சக்தியை உறிஞ்சிய களைப்பில் வேளைக்கே படுத்துவிட்டான். இரதிக்குத் தூக்கம் வரவில்லை. மும்மூர்த்திகள் அறைக்குள் செல்லும்வரை காத்திருந்துவிட்டுப் பின்பு சுவர் அருகில் படுத்துக் கொண்டாள். அதன் பின்பு வழமை போல இரங்கனும் வந்து படுத்துக் கொண்டான். இருவருக்கும் தூக்கம் வரவில்லை. எப்படித் தொடங்குவது என்பதும் இரங்கனுக்குப் புரியவில்லை. இரதி சுரேனுக்கு மறுபக்கம் சுவரோடு படுத்திருந்தாள். கை காலைக்கூட சுரேனைத் தாண்டிப் போட முடியாது? இவ்வாறாக எண்ணி எண்ணிக் குழம்பிக்கொண்டிருந்தான் இரங்கன்.

படுக்கையில் புரண்டு புரண்டு இரண்டு மணித்தியாலங்கள் படுத்திருப்பான். தூக்கம் வரவில்லை. காமம் தூக்கத்தைவிட வீரியமாக எழுந்து நின்றது. அதே நிலையில் இரதியும் புரண்டாள். அவளுக்கு வேறு ஓர் அவஸ்தையும் கூடவே

*இருந்தது. சிறுநீரைக் கழிக்க எண்ணிக் கழிவறைக்குச் சென்றாள். கழிவறைக்கு அவள் தாள் போடவில்லை.*

*சுரேன் நித்திரையில் புலம்பிய வண்ணம் திடீரெனச் சுவரோடு புரண்டு படுத்தான். இதை இரங்கன் கவனித்துவிட்டுச் சுரேனை ஒட்டினாற் போல் உருண்டு படுத்தான். பின்பு கண்களை அரைகுறையாய் திறந்து பார்த்தான். ஏமாற்றத்தோடு கழிவறை விளக்கை அணைத்துவிட்டு கோல் விளக்கை அணைக்கும் போதுதான் அங்கே நடந்திருந்த மாற்றத்தை அவள் கவனித்தாள்.*

*உடம்பெல்லாம் மின்சாரம் பாய்ந்தது போலவும், அதனால் ஒருவித சூடு பரவுவது போலவும் அவளுக்கு இருந்தது. இரங்கனின் எண்ணம் புரிந்தது விட்டது. விளக்கை அணைத்தாள்.*

*அந்தரங்க அந்த அசைவுகளில் உணர்ச்சி வயப்பட்ட இரங்கனிடமும் இரதியிடமும் இருந்து சிறிது பலமாகவே அசைவும் அனுங்கலும் வெளியாகின. ஏதோ ஒரு பயங்கரக் கனவின் நிமிர்த்தமாய் முழிப்பிற்கு வந்த சுரேனின் செவிகளில் இந்த ஒலி பழுக்கக் காய்ச்சிய ஊசிகளாய் ஏறின. அவன் அது வந்த திசையை நோக்கினான். அங்கே உச்சக்கட்டம் முடிந்தும் இரு உடல்களும் பிரிய விருப்பம் இல்லாது பிணைந்திருந்திருந்த காட்சி சுரேனை அதிரவைத்தது.*

*நெருப்புப் பட்ட மயிர்கொட்டி போலத் துடித்தான் சுரேன்.*

⋆

*அடுத்த நாள் காலை எல்லோரும் வேலைக்குச் சென்றுவிட்டனர். வீடு நிசப்தத்தில் உறைந்து கிடந்தது. சுரேனின் மனது அதற்கு எதிராக எரிமலையாகக் குமுறியது. இந்தத் தனிமையில் இவளைக் கொலை செய்தால் என்ன என்று அவனுக்கு எண்ணத் தோன்றியது. அடுத்த கணமே அது தப்பு என்றது இந்த நாட்டின் நடைமுறை நினைவுகள். மணிக்கூட்டில் நேரம் ஆறு மணி ஐம்பது நிமிடம் காட்டியது. எட்டு மணிக்கு எழுந்தால் போதுமென்று மீண்டும் இழுத்துப் போர்த்துக் கொண்டான்.*

*எப்படித் தூங்கினானோ தெரியாது. விரைவாகவே அலார்ம் அடித்தது. இவன் எழும்புவதற்குள் இரதி எழும்பிக் குழியல் அறைக்குச் சென்றுவிட்டாள். அவள் வெளியே வரும் வரையும் படுத்தான். மீண்டும் தூக்கம் கண்களை இறுக்கின. காலைக்கடனை முடித்துக் கொண்டு வந்தவளிற்கு இவன் தூங்குவது கண்ணிற்பட்டது. அவனை எழுப்பினாள். முழிப்பிற்கு வந்தவன் அவளது ஸ்பரிசத்தை உணர்ந்தான். ஏதோ அருவருப்பான கம்பளிப்பூச்சி ஊர்வது போல் ஓர் உணர்வு இன்று அவனுக்கு உண்டானது. என்ன செய்வது என்று புரியாது ஒரு சில வினாடிகள் விழித்தான். பின்பு விருட்டென எழுந்து குழியல் அறைக்குச் சென்றான். சாப்பாட்டு மேசையில் வந்திருக்கும் போது 'ஏன் கவலையா இருக்கிறாய்?' என்றாள் இரதி. 'அது உனக்கே தெரியும்.' என்றான் சுரேன். அதற்குமேல் அங்கிருக்காது அவன் எழுந்து சென்றுவிட்டான்.*

*இரதி பாடசாலைக்குச் செல்லவில்லை. அப்படியே விசும்பிய வண்ணம் தான் செய்ததை எண்ணிக் குழம்பினாள். 'இனிமேல் இப்படிக் கோலுக்குள் படுக்கக் கூடாது. ஒன்றில் வேறு வீடு பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் மும்மூர்த்திகள் பாவிக்கும் அறையை நாங்கள் பாவிக்க வேண்டும்.' என்று எண்ணினாள்.*

*இரதி தொழிற்சாலைக்குச் சென்றாள். இரங்கன் இவ்வரவை அறிந்தான். அவனுக்கு உடனேயே புரிந்துவிட்டது.*

*இரதியின் முகம் அழுது வீங்கி இருந்தது. அவனுக்கு பார்க்கப் பாவமாய் இருந்தது. 'இனி இப்படிக் கோலுக்க நாங்க படுக்கேலாது. சுரேன் என்னைப் பற்றி உங்கட பிறன்ஸ்சிட்ட வேற விதமா சொன்னாலும் சொல்லுவான்.' என்றாள் எதையோ நினைத்த வண்ணம்.*

*அதே இடத்தில் வேறு தொழிற்சாலையில் இந்திய நண்பர் ஒருவர் வேலை செய்தார். சுரேன் அவருடன் கதைத்து வேறு ஒரு வீடு எடுத்துக்கொண்டான். அன்று மாலையே அவன் அங்கே குடியிருப்பதற்குச் சென்றுவிட்டான். இரதிக்கும் இரங்கனுக்கும் அந்த அறையை நண்பர்கள் விட்டுக் கொடுத்தார்கள். இரங்கன் தொழிற்சாலையுடன் கதைத்து, தானும் இரதியும் வசிப்பதற்குத் தொழிற்சாலையின் தனிவீடு ஒன்றை பின்பு வாடகைக்குப் பெற்றுக் கொண்டான்.*

*இப்போது தெருவில் இரதியைக் கண்டால் சுரேன் சிரிப்பான். எங்கே போகிறாய் என்று கேட்பான். அத்தோடு அவர்களின் உரையாடல் முற்றுப் பெற்றுக் கொள்ளும். அவன் இரங்கனோடும் அப்படியே நடந்து கொண்டான்.*

*அடுத்த வருடம் பாடசாலை கிடைத்தது. அப்போது வேறு ஒரு சிக்கல் உருவாகியது.*

## *10. புதிய சிக்கல்*

*இரதிக்கு அவள் வாழ்ந்த இடத்தில் பாடசாலை கிடைக்கவில்லை. மாறாக லில்லிகாமர் என்னும் இடத்தில் பாடசாலை கிடைத்தது. இருவரும் ஒவ்வொரு நாளும் சந்திக்கமுடியாத தூரம் அது. மாதத்தில் ஒரு முறை சந்திப்பதற்கே இப்போது இருக்கும் நிலையில் கட்டுபடியாகாது. என்ன செய்வது என்று இரதிக்குக் குழப்பமாய் இருந்தது. பின்பு 'போவதாய்க் கூறிப் பார்ப்போம். நீ போக வேண்டாம். நாங்கள் இருவரும் பதிவுத் திருமணம் செய்து கொள்வோம். அப்படிச் செய்தால் நீ கட்டாயம் பாடசாலை போகவேண்டிய அவசியம் இல்லை.' என்பதாக இரங்கன் கூறுகிறானா அல்லது வேறு ஏதாவது கூறுகிறானா என அறிய விரும்பினாள்.*
*வேலை முடிந்த களைப்பில் இரங்கன் இவளது கூந்தலுக்குள் முகத்தைப் புதைத்துப் படுத்திருந்தான். இவள் கூரையை வெறித்தாள். வெளியே கரியாக துருவம் இருண்டு கிடந்தது. உள்ளே மனதில் பயம் அப்படியாக. அதனால் மனம் ஒரு நிலைப்படவில்லை. இரதி எப்படியாவது கேட்டுவிட வேண்டும் என்று எண்ணினாள். ஏதோ தொண்டையில் அடைத்தது போன்று வசனங்கள் வரமறுத்தான். பின்பு ஒருவாறு சமாளித்த வண்ணம்,*

*'எனக்கு ஸ்கூல் லில்லிகாமரில கிடைச்சிருக்குது.' என்றாள். இதைக் கேட்டதும் 'ஏன் நீ அங்க போகோணும்?' எனக் கேட்க எண்ணியவன் நாக்கைக் கடித்துக் கொண்டான். அவன் மனது 'இவளுக்கு நான் இரண்டாம் ஆண். அத்தோடு என்னைவிட வயது கூடியவள். தான் நினைத்ததையே எப்போதும் செய்பவள். இவளோடு சில காலம் படுக்கலாம். ஆனால் எப்படி வாழ் நாள் பூ10ராகவும்? நிச்சயம் முடியாது. ஊருக்குப் போகும் போது கௌரவமான அடக்கமான, மனைவியாய் இவளைக் கூட்டிக் கொண்டு செல்ல முடியாது. அதனால் இவளைக் கொஞ்சம் கொஞ்சமாய் வெட்டிவிட வேண்டும். இது அதற்கு நல்ல சந்தர்ப்பம்.*

*இப்படியே போகவிட்டால் பின்பு தொல்லைகள் குறையும். தொடர்பு அறும்.' என்று எண்ணியவனை இரதியின் குரல் சீண்டியது.*

*'என்ன ஒரு பதிலையும் காணம்?'*
*'பள்ளிக்கூடம் முக்கியம்தானே?' பழியை அதன் மேல் போட்டான்.*
*'நான் வாற புதன் வெளிக்கிட இருக்கிறன்.' என்றாள் இரதி சோகமாக.*
*இரதிக்குத் தடுப்பதாய் அவனிடம் இருந்து பதில் வராதது பெரும் ஏமாற்றமாகிற்று. அவன் அப்படிக் காய் வெட்டுவதின் அர்த்தம் அவளுக்குப் புரிந்தது. அவள் கவுண்டு படுத்துக் கொண்டாள்.*

*போகும் போது இரதியின் முகவாட்டம் இரங்கனுக்கு வருத்தம் தந்தது. அடுத்து வந்த விடுமுறைக்கு அங்கே பல பரிசுப் பொருள்களுடன் நின்றான். இவன் வந்து நிற்பதைக் கண்டவுடனேயே அவள் மனம் இரங்கிவிட்டது. அன்பு கடும்பாய்ச் சுரந்து விட்டது. தேக்கிவைத்த காமத்திற்கு வடிகால் தேவைப்பட்டது. ஏன் தனது மனம் இப்படி அல்லாட வேண்டும் என்று தன்னைக் கேட்டுக் கொண்டாலும் அவளுக்கு விடை கிடைக்கவில்லை. அவனின் அணைப்பில் அந்த சில நாட்களுக்குள் இரதி இந்த உலகை மறந்துவிட்டாள்.*

*இன்பத்தில் திளைத்துவிட்டால் பொழுது போவது எப்படித் தெரியும்? விடுமுறை வெகு விரைவாகவே கழிந்தது. பாடசாலை மீண்டும் தொடங்கியது. இங்கிருந்தால் இரங்கனால் வேலைக்குப் போக முடியாது. யாரும் பணம் தரமாட்டார்கள். சாப்பாடுகூடப் பணம் இருந்தால் மட்டுமே கிடைக்கும். அதைவிட வேலையில்லாப் பிரச்சனை உள்ள இந்த நேரத்தில் வேலையை விட்டுவிட்டால் பின்பு எடுப்பது கஸ்ரம். இரங்கன் ஊருக்குப் புறப்பட்டுவிட்டான்.*

*புகையிரதத்தில் புறப்படும் போது நடைமேடையில் நோர்வே மக்கள் தத்தம் பணிகளில் வெகு ஈடுபாடாய் இருந்தனர். இரங்கன் இரதியின் கையைப் பிடித்துக் கொண்டே பெட்டிக்குள் ஏறினான். இரதியின் கையைச் சிறிது நேரம் தடவிய பின்பு அவளது வதனத்தை நிமிர்த்தி முத்தமிட்டான்.*

*அதன் பின்பு அவர்களின் தொடர்பு தொலைபேசியில் மட்டும் பிடிபடாத அலைவரிசையாகியது. அதிலும் அவர்கள் அடிக்கடி கதைப்பதில்லை. காலம் ஜாலம் காட்டிய வண்ணம் விரைவாகப் பிரபஞ்சத்தின் அசைவுக்கு இணங்கியது. இதற்கிடையில் லண்டனிற்கு இரதியின் மைத்துனன் ஒருவன் அகதியாய் வந்தான். இரதியைப் பார்ப்பதற்கு ஆசையாய் இருப்பதாயும் அங்கே தன்னைப் பார்க்க வருமாறும் அவன் கூறினான். அவர் எதற்காக அப்படிக் கூறினான் என்பது இரதிக்குப் புரிந்தது. இவளுக்கு என்ன செய்வது என்று முதலில் புரியவில்லை. லண்டனிற்குச் சென்றால் இரங்கனின் அணைப்பை இழக்க நேரிடுமே என்று எண்ணும் போது அது சகிக்கவில்லை. இரங்கன் தன்னில் எவ்வளவு அன்பு வைத்துள்ளான் என்பதைச் சோதித்துப் பார்க்க வேண்டும் போலும் இருந்தது. அதற்கு ஒரு வழியையும் அவள் கண்டுபிடித்தாள்.*

*தொலைபேசி மணி அடிக்கவே இரங்கன் சென்று அதை எடுத்தான்.*

*'கலோ.'*
*'கலோ நான்தான்.'*
*'எப்படி இருக்கிறாய் குட்டி?'*
*'நான் நல்லா இருக்கிறேன். நீங்க?'*
*'தூக்கம் இல்லாமல் தவிக்கிறன். அது சரி விடுமுறைக்கு இங்க வருவியா?'*

*'இல்ல இரங்கன். என்ர சொந்தக்காரர் ஒருத்தர் லண்டனில இருந்து போன் பண்ணினவர். அங்க என்னைக் கட்டாயம் வரட்டாம்.'*
*'ஆங... அப்பிடியே?'*
*'உங்களுக்கு ஒரு கஸ்ரமும் இல்லையே?'*
*'சீ...சீ... நீ போயிட்டுவா.' என்றான் இரங்கன்.*

*பின்பு பல கதைகள் கதைத்தனர். அவனது அந்தப் பதில் இரதிக்கு அவன் மீது பெரும் ஏமாற்றத்தையும் கோபத்தையுமே உண்டுபண்ணியது. அந்தக் கோபத்தில் அதன் பின்பு அவனுக்கு அவள் போன் எடுக்கவில்லை. அவள் லண்டனிற்குப் போகத் தயாரானாள்.*

# *11. இலண்டனும் இரதியும்*

*லண்டனில் இறங்கியது தொடக்கம் சுமித்திரனுடைய அன்பும், கவனிப்பும் இவளைத் தடுமாற வைத்துவிட்டது. சுமித்திரன் ஒரு குடும்பத்துடனேயே சேர்ந்து வாசித்து வந்தான். அவர்கள் இவனுக்கு ஓர் அறையைக் கொடுத்து அவர்களே சாப்பாடும் கொடுத்தனர். அத்தோடு அவர்கள் இவனில் நல்ல அன்பாயும் இருந்தனர். பகலில் கடைகளுக்கு, லண்டனில் முக்கியமாகப் பார்க்கவேண்டிய இடங்களுக்குக் கூட்டிச் சென்றான். இரவில் தனது அறையையே இவளுக்குக் கொடுத்து உபசரித்தான். ஏன் என்பது அவளுக்குப் புரிந்தது. ஆண்கள் என்று நினைத்தாள். சிலவேளை சுமித்திரனின் பார்வை தன்னையே விழுங்கிவிடுவது போன்று தன்மீது படருவதை உணர்ந்தாள். அவன் வழிந்து, வழிந்து கதைப்பதையும் கவனித்து இருக்கின்றாள். ஆண்கள் சந்ததி பரப்புவதைத் தவிர வேறெதுவும் சிந்திப்பதில்லையோ என்று அவளுக்குத் தோன்றியது. சுமித்திரன் மச்சான் முறையென்பதால் அவன் இப்படிச் செய்வதுதான் இயல்பு என்றும் எண்ணினாள்.*

*அன்று சுமித்திரனும், கேசவனும் வெளியே சென்றுவிட்டார்கள். தேவியோடு இரதி கதைத்துக் கொண்டிருந்தாள். அப்படிக் கதைக்கும் போது 'உன்னோட ஒரு முக்கியமான விசயம் கதைக்க வேணும்.' என்று கூறிவிட்டுத் தேவி அமைதியாகச் சிறிது நேரம் இரதியைப் பார்த்துக் கொண்டு இருந்தாள். தேவியின் இந்தப் பார்வை இரதிக்கு என்னவோ போலிருந்தது. எனவே சங்கடத்துடனே,*

*'என்ன விஷயம். அப்பிடிப் பாக்கிறியள்?' என்றாள்.*
*'நீ சுமித்திரனைப் பற்றி என்ன நினைக்கிறா?' என்றாள் அவள்.*
*'நல்லவர். அடக்கமானவர். அவருக்கு என்ன?'*
*'அவன்ர அந்த அடக்கமும், தன்மானமும் உன்னிட்டயே உண்மையைச் சொல்லத் துணிவு இல்லாமல் அக்கா கேட்டுச் சொல்லுங்களேன் எண்டு என்னிட்ட கெஞ்சிற அளவுக்கு இருக்குது. அவன் ஆசைப்பட்டது கிடைக்கேல்லையெண்டா இடிஞ்சே போயிடுவான்;. உனக்கு அவன மாதிரி ஒரு நல்ல மச்சான் கிடைச்சது கொடை. நீ போறத்துக்குள்ள றியிஸ்ரேசன் செய்ய வேணும் எண்டு நினைக்கிறான். இரதி நீ இப்ப உடனடியாப் பதில் சொல்ல வேண்டாம். நல்லா, யோசிச்சிட்டுச் சொல்லு. ஆனா இல்லை எண்டு மட்டும் சொல்லிடாத.'*
*இரதியின் கைகளைத் தேவி பிடித்துக் கொண்டாள். அவை நடுங்கின.*
*அன்று இரவு இரதிக்குச் சிவராத்திரியானது.*
*'சுமித்திரனை வேண்டாமென்று கூறிவிடவா? எப்படிக் கூறுவது? நீ லண்டன் போகாதே. நானும் நீயும் இங்கேயே சந்தோஷமாய் இருப்போம் என்று ஒரு ஒப்புக்குக்கூடக் கூறமுடியாத இரங்கனை நம்புவதா? யோசித்துப் பதில் சொல், ஆனால் இல்லை என்று மட்டும் கூறிவிடாதே என்ற போது சத்தியம் போல்*

*நடுங்கிய கைகளை நம்பாது விடுவதா? இரங்கனை நம்பவே முடியாது.' அவள் முடிவு செய்து கொண்டாள்.*
*'சுமித்திரன் என்னைவிட வயது கூடியவன். எனக்கு முறை மச்சான். எந்தச் சந்தர்ப்பத்திலும் அவன் என்னை ஏமாற்றவே மாட்டான். எனது பழைய தொடர்புகளைப் பற்றி இவனுக்குத் தெரியாது. தெரியவும் வராது. வரவும் கூடாது.' சுமித்திரனை மணப்பதாய் அவள் மனதில் முடிவு செய்து கொண்டாள். 'மூன்றாவது ஆண். அதில் என்ன இருக்கிறது? அணுக்கொரு நீதி பெண்ணுக்கொரு நீதியா?' என்று எண்ணினாள்.*

*அடுத்த நாள் தேவியிடம் தனது சம்மதத்தைத் தெரிவித்தாள். தேவியும் அதை சுமித்திரனிடம் தெரிவிக்க அவன் சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தான். பின்னர் அவளைக் காரில் ஏற்றிக் கொண்டு லண்டன் மாநகரைச் சுற்றினான். படம் பார்த்தனர். அப்படிப் படம் பார்க்கும் போது சுமித்திரனின் கரங்கள் இரதியை இறுக்கவும் சேட்டை செய்யவும் செய்தன. அதை இரதி தவிர்க்கவில்லை. அவளுக்கு அவனது ஸ்பரிசம் இன்னும் ஓர் புதுமையான அனுபவத்தைத் தந்தது. இரவு இவளது அறைக்குள் வந்து இருந்தான். அரட்டை அடித்தான். பதினொரு மணிபோல் எழுந்துகொண்டான்.*

*'எங்க போறீங்க?' என்றாள் இரதி.*
*'இனிப் படுப்பம் இரதி. அதுதான் வெளியில போறன்.'*
*சிறிது நேரம் அவனை விஷமமாய்ப் பார்த்தாள்.*
*'இனியும் நீங்க ஏன் வெளியில படுக்கோணும்?' என்றாள்.*

*இப்படி ஓர் வார்த்தை இவளிடம் இருந்து வருமென அவன் எதிர்பார்க்கவில்லை. தேன் குடிக்கும் கரடியின் அவசரத்தோடு கதவிற்குத் தாழ்ப்பாள் போட்டான். சுமித்திரன் கட்டிலில் அமர்ந்தான். மீண்டும் துணிவோடு அவளை அண்டி அமர்ந்தான்.*

*இப்படியாக அவளது விடுமுறை மிகவிரைவாகவே கழிய இரதி புறப்பட்டாள். சுமித்திரன் பெரும் கவலையோடு விடை கொடுத்து அனுப்பி வைத்தான். அத்தோடு தான் நோர்வேக்கு வெகு விரைவில் வருவேன் என்றான். அதற்குத் தங்கள் பதிவுத் திருமணம் மிகவும் உதவியாய் இருக்கும் என்று கூறினான்.*

*இரங்கனுக்கு அன்று ஊரில் இருந்து கடிதம் வந்திருந்தது. பெற்றோர் அழகிய பெண் ஒருத்தியின் படமும் இலவசமாக அத்தோடு இணைத்திருந்தனர். படம் தொடக்கம் பதக்கங்கள், சொத்துக்கள் என்று கரும்பு தின்னக் கூலியா வேண்டும்? ரங்கனுக்கு மட்டுக்கொள்ளா மகிழ்ச்சி. இரதியின் நினைவு வந்தது. 'அவள் குடும்பத்திற்கு ஒரு போதும் ஏற்றவள் அல்ல. சுரேனோடு படுக்கும் போது நான் அவள்மீது கைவைக்க விட்டவள். என்னோடு வாழும் போது இன்னொருத்தன் கைவைக்க ஏன் விடமாட்டாள்? நிச்சயம் விடுவாள். இப்படிப்பட்டவளை எப்படி நம்பித் திருமணம் செய்துகொள்வது? நான் நல்ல கௌரவமாய் வாழ வேண்டும். இரதியைத் திருமணம் செய்து கொள்வதால் நிச்சயம் நான் கௌரவமாய் வாழமுடியாது.' என்று எண்ணியவன் இலவச இணைப்புப் பெண்ணை மணப்பதற்குச் சம்மதம் தெரிவித்துக் கடிதம் எழுதுவதாய் முடிவு செய்தான்.*

## *12. உண்மை உறைத்தது*

அன்று சனிக்கிழமை. காலைச் சாப்பாடே பகல் பதினொரு மணிக்குத்தான் சாப்பிட்டனர். சாப்பிட்ட பின்பும் இரங்கன் இரதியை அணைத்தான். அவள் சிணுங்கினாள்.

அவர்கள் தங்களை மறந்து சிற்றின்பத்தில் மூழ்கித் திளைத்தனர். அப்படி இவர்கள் மூழ்கித் திளைக்கும் போது ஒருமுறை வாசல் மணி ஒலித்தது. பின்பு அது ஒலிக்கவில்லை. வாசல் மணி ஒலிக்கும் போது இருவரும் இணை பிரியமுடியாத நிலையில் இருந்தனர். சிறிது நேரத்தில் பிரியமுடியாமல் பிரிந்து சறத்தைக் கையிலே பிடித்த வண்ணம் கோலுக்கு வந்த இரங்கனுக்கு யார் இந்த இளைஞன் என்கின்ற கேள்வி எழுந்தது.

சுமித்திரனுக்கோ தலையே சுற்றியது. 'யார் இவன்? இந்நிலையில் உள்ளே இருந்து வருகிறானே? நான் இப்படித் திடீரென வந்தது நல்லதுதானோ? வாழ்க்கையிலே நான் விழ இருந்த பெரும் பாதாளத்தில் இருந்து தப்பிக்க கடவுள் கொடுத்த சந்தர்ப்பமா?' அவன் கேள்விக் குறிக்குப் பதில் தேட எண்ணியவனாய், 'இங்க இரதி?' என்று தொடங்கினான்.

'இரதி இஞ்ச வா. உன்ன யாரோ பார்க்க வந்திருக்கினம்.' என்றான் அவன். இரதி தனது நைட்டியை சரி பண்ணிய வண்ணம் கலைந்த கூந்தலுடன் வந்தாள். வந்தவள் 'சுமித்திரன்...' என்று கூவிய வண்ணம் வாயடைத்துப் போனாள். வந்தவன் யார் என்று அப்போதுதான் இரங்கனுக்கும் புரிந்தது. ஒன்றும் புரியாமல் வழித்தான்.

சுமித்திரனே கதைக்கத் தொடங்கினான்.

'இரதி நான் உன்ன எப்பிடி எல்லாமோ எண்ணி இருந்தன். நீ இப்பிடி பட்டவள் எண்டு தெரிஞ்சிருந்தா உன்னைத் தொட்டிருக்க மாட்டன். சா நீ எல்லாம் ஒரு பெம்பிளை. உன்னை நம்பி நான் இங்க வந்திருக்கிறன். ஊரா இருந்தா எனக்கு வாற கோபத்துக்கு இரண்டு பேரையும் வெட்டிக் கொலை செய்யவன்.'

சுமித்திரன கோபத்தோடு விருட்டென்று அவ்விடத்தை விட்டு வெளியேறினான். இரதி வாயடைத்துப் போய் மரமாய் நின்றாள். இரங்கனுக்கு என்ன செய்வது எனப் புரியவில்லை. இரதிமீது கோபம் வந்தது. அவள் எல்லோரையும் ஏமாற்றுவதாய் எண்ணினான்.

அங்கே குண்டூசி விழுந்தாற்கூட கேட்கும் அவ்வளவு அமைதியாக இருந்தது. சுமித்திரன் பேசியதைவிட இந்த அமைதி பெரும் பயத்தை ஏற்படுத்தியது. இரதி திடீரெனக் குளறி அழத் தொடங்கினாள்.

இரங்கனுக்கு அது பெரும் சங்கடமாய் போய்விட்டது. கோபத்தை மறந்தான். 'இரதி இரதி...' என்று பதறிய வண்ணமே சென்று அவளை அணைத்தான். ஆறுதல் கூறினான். அவள் அன்றுதான் நீண்ட நேரம் அழுது கொண்டே இருந்தாள். அன்று இரவு அவர்கள் இருந்தும் இல்லாததாய் உறைந்து கிடந்தனர்.

அடுத்த நாள் பிற்பகல் இரங்கன் தனது பொருட்களை அடுக்கி வைத்துவிட்டு இரதியைத் தேடினான். அவள் மாலை நேரத்திற்கான தேநீர் தயாரித்துக் கொண்டிருந்தாள். இரங்கன் அவள் பின் போய் நின்ற வண்ணம்,

'இரதி...' என்றான்.

*'என்ன?'*
*'நான் இண்டைக்குப் போறன். நாளைக்கு வேலைக்குப் போகோணும்.'*
*'ம்.'*
*'இரதி கவலைப்படாதே. சுமித்திரன் இல்லாட்டி இன்னொருத்தன். சிலோனில இருந்தாத்தான் நடத்தை கெட்டவள் எண்டு கழிச்சு வைப்பினம். ஆனா, இங்க யாராவது ஒருத்தன் நிச்சயம் வாழ்க்கை தருவான். சரியே... மனந்தளராத. சந்தோஷமா இரு. என்ன?'*

*இதற்கும் 'ம்...' என்று மட்டும் அவள் பதிலளித்தாள். அவளை அப்படியே திருப்பி அவள் வதனத்தை அவன் நோக்கினான்.*

*அவனால் சகிக்க முடியவில்லை. அவளின் பார்வையைப் பார்க்கும் போது பரிதாபமாய் இருந்தது. அவளது கண்களில் நீர் திரையிடக், கலக்கத்தோடு இரங்கன் அவளது கண்களைத் துடைத்து விட்டான்.*

*'நீ எதுக்கும் கவலைப்படாத. எல்லாம் நல்லபடியா நடக்கும் என்ன?' என்றான்.*
*'நீங்க என்னை இனி மறந்திடுவீங்க இல்ல.' என்றாள் அவள் பரிதாபமாக.*
*'நான் எப்பிடி உன்னை மறப்பன். ஊரில இருந்து எனக்கு மனிசி வந்தா உன்னோட வந்து இப்பிடித் தங்கேலாது. ஆனா வாழ்நாள் முழுவதும் உன்னை என்னால மறக்கவே முடியாது. சரி நான் போயிட்டு வாறேன்.' அவன் சொல்ல, இவள் 'ம்...' எனப் பதில் கொடுக்கும் போது மீண்டும் இவள் கண்களில் நீர் திரையிட்டுக் கொண்டது. அவள் பார்வையில் இரங்கன் கலங்கலாய்ப் போய்க்கொண்டிருந்தான். இரதிக்குத் தனிமை தன்னைச் சிறைபிடித்தது போன்று இருந்தது. தன்னை எல்லோரும் நடுக்காட்டில் தவிக்கவிட்டுப் போனதான தடுமாற்றம்.*

*காடென்றாலும் ஏதாவது குரங்கின் துணையாவது கிடைக்கும். இவளுக்கு அதுவும் கிடைக்காத மணற் காடான பாலைவனத்தில் தவிக்கவிட்டது போன்று இருந்தது. அவள் அப்படியே போய்ப் படுக்கையில் தொப்பென விழுந்தாள்.*

*காலம் நின்றுவிடாது பயணிக்கும் புரவி. அது யாருக்கும் கட்டுப்படாது தனது ஸ்ரத்திற்கு ஓடிக் கொண்டே இருக்கின்றது. எவராலும் அதைத் தடுத்து நிறுத்திவிட முடியாது. எவர் கவலையும் அதைப் பாதிப்பதில்லை.*

*ஆறுமாதங்கள் சட்டென ஓடிவிட்டன. அந்தச் சம்பவம் நடந்ததிற்குப் பின்பு இரங்கன் ஒருமுறை இங்கு வந்திருந்தான். தனக்கு வெகு விரைவிலேயே இல்லாள் வரவிருக்கின்றாள் என்றும் கூறினான். முன்பு போல இவளால் இப்போது அதிக ஈடுபாடு காட்ட முடியவில்லை. ஆனால் அவன் இழுக்கும் இழுவைக்கு இவள் இணைந்தே கொடுத்தாள். இரங்கன் தங்கியிருந்த பத்து நாள்களும் தனிமை குறைந்துதான் இருந்தது. ஆனால் அவளால் முழுமையாகத் தன் நிலைமையை மறக்க முடியவில்லை. ஆறுமாதங்கள் அவள் கவலையாகத், தனிமையாக மட்டும் அல்ல கனதியாகவும் இருந்தாள்.*

*இரதி கர்ப்பமாய் இருக்கின்றேன் என்று தொலைபேசியில் தெரிவித்த போது இரங்கன் கலைத்துவிடு என்றான். அப்போதுதான் நீ இன்னொருவனை மணந்து கொண்டு நிம்மதியாய் வாழ முடியும் எனப் புத்தி கூறினான். அவள் அதற்கு மறுத்துவிட்டாள். என்னால் என் சிசுவைக் கலைக்க முடியாது என்று சாதித்துவிட்டாள்.*

இரதிக்குப் பிரசவ நாள் அண்டியது. இரங்கன் வரவில்லை. அவனைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. இரதி இரங்கன் வீட்டிற்குப் போன் செய்த போது எந்தப்பதிலும் கிடைக்கவில்லை. ஏமாற்றத்தோடு வைத்துவிட்டு என்ன செய்வது என்று யோசித்தவளுக்கு அவனது நண்பனின் தொலைபேசி எண் நினைவுக்கு வரவே அங்கே போன் செய்தாள். அப்போது இரங்கன் தனது மனைவியைக் கூட்டிவர ஒஸ்லோ சென்றுவிட்டான் என்பது தெரிய வந்தது. இவளுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. ஒரு காலத்தில் தனியே சென்று இதய அறுவை சிகிச்சை செய்திருக்கிறாள். அப்போது எதற்கும் கவலைப்படவில்லை. இன்று தனியே போய் பிள்ளைப் பெற வேண்டியதை நினைக்கும் போது கவலையாக இருந்தது. அனாதைபோல் உணர்ந்தாள்.

மருத்துவமனையில் மயக்கம் தெளிந்த போது அவளது மார்பில் அந்தச் சின்னப் 'பூ' கிடந்தது. இவள் மெதுவாக அதைத் தடவி உயர்த்தித் தூக்கிப் பார்த்தாள். இனி வாழ்க்கையில் தனிமையை உணரத் தேவையில்லை என்பதாய் அவளுக்குத் தோன்றியது.